# முகவுரை

நன்னூல் தன்னளவில் எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் தர்க்க ரீதியாக உணர்த்துவதாயினும், அது பல விஷயங்களை இதரேதரமாக உரைத்தலால், இலக்கணம் கற்கப்புகுகின்ற மாணாக்கர்கள், பின் அறியத்தக்கவைகளை முன்னும், முன் அறியத்தக்கவைகளைப் பின்னுமாக அறிதல்வேண்டி இடர்ப்பட்டு, இலக்கண நூலால் முகஞ்சுளிப்பாராகின்றனர். நினைவில் வைப்பது அவசியமல்லாத பல சூத்திரங்களையும் உரையையும் உதாரணங்களையும் சில பண்டிதர்கள் உருவிடும்படி வலியுறுத்தலால் மாணாக்கர்களுக்கு இலக்கணமென்பது விருப்பமில்லாத வேப்பம்பழமாகின்றது. பிரயோகித்துக் காட்டப் பலவிதத்தில் பயில்விக்காமல், சில விதிசூத்திரங்களை உருவிடும்படி வலியுறுத்தினால், மாணாக்கர் நன்னூலைக் கையால் தீண்டவும் அஞ்சுவாராகின்றனர். ஆகவே, எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் கற்பிக்கத்தக்க முறையாக நன்னூல் சூத்திரங்களை வகைப்படுத்தித் தொகுப்பது இவ்விலக்கணச் சுருக்கத்தின் நோக்கம். நன்னூலில் உள்ளபடியே உரையையும் உதாரணங்களையும் படித்தறியுமாறு சூத்திரங்களின் எண்கள் வலப்பக்கத்தில் இட்டிருக்கின்றன.

வசனநடையைப் போற்றற்குரிய இக்காலத்தில் வாக்கியங்களின் முடிபிலக்கணத்தை அறிவது ஒருதலை. இது பழைய இலக்கணங்களில் ஓரிடத்தில் ஒருசீராக உரைத்திருப்பதில்லை. நன்னூலில் பல இடங்களில் உடைந்துள்ள சூத்திரங்களை ஓரிடமாகச் சேர்த்து வகைப்படுத்திக்கொள்ளின் வாக்கியலக்ஷணம் ஏறக்குறைய ஒழுங்காகும். இது செய்வதும் இவ்விலக்கணச் சுருக்கத்தின் ஒருபுடை நோக்கம்.

எழுத்தும் சொல்லும் உணர்ந்தார் செய்யுளிலக்கணமும் அணியிலக்கணமும் அறியத் முறை சூத்திரங் காட்டி இடர்ப்படுத்தாமல் அவைகள் வசனமாகவே விளக்கியிருக்கின்றன. இவையெல்லாம் அறிவது பொருளின் பொருட்டாதலால், அது இறுதியில் ஒருவாறு சுருக்கமாகச் சேர்த்திருக்கிறது.

சுருக்கமான இப்பஞ்சலக்ஷணத்தை உணர்ந்தபின், பின் நன்னூல் விருத்தியுரை தொல்காப்பியவுரை முதலியவற்றை எளிதில் கற்கலாகும்.

1903-ஆம் அச்சிட்ட இச்சுருக்கம் இப்பொழுது சில நீக்கியும் சில சேர்த்தும் பதிக்கப்பெற்றுள்ளது.

1918. தி. சே.

# புதிய பதிப்பின் முகவுரை



இலக்கணங் கற்குமுறையைச் சுருக்கமாக வகைப்படுத்தி அவ்வளவே முன் பதிப்பைத் தொகுத்த நோக்கம். சில குறிப்புக்களையும் உதாரணங்களையும் அங்கங்கே காட்டுவது இந்நூலைப் பெரிய பாடசாலை வகுப்புகளில் கற்பிப்பதற் கேற்ற நல்ல சாதனமாகுமென்று நண்பரான ஓ பற்றமிழாசிரியர் சிலர் வற்புறுத்தினர். அது செய்வதோடு, மாணாக்கர்களுக்கு உதவியான சில விஷயங்களும் சில அநுபந்தங்களும் அங்கங்கே தொடர்புபடுத்தியிருக்கின்றன

எவ்விதத்திலாவது பிள்ளைகள் எளிதில் இலக்கணங் கற்றுத் தமிழைப் போற்றுதல் வேண்டுமென்பதே இந்நூலை அச்சிடுதலான விருப்பம். தமிழர்க்கு உதவியாகத் தமிழ் வல்லவர்கள் செய்வது ஒரு தலையான பல வேலைகள் ஏற்பட்டுவருகின்றன. அது செய்யாத வரையில் அவர்கள் பாஷாபிமானமும் தேசாபிமானமும் இல்லாதவர்களென்று பழிக்கப்படுவர் இப்பழியை ஒழிக்கும் பொருட்டுத் தமிழிலக்கிய விலக்கணங்களை மாணவர்கள் எளிதிலறிந்து பயின்று புலமை நிரம்பும்படி செய்வது இயற்றமிழாசிரியர்களைப் பொறுத்த கடமை இக்கடமையைக் கடைபோகச் செலுத்துமாறு தமது அறிவாற்றலாலும் அனுபவ சித்தியாலும் தோன்றுகின்ற முறைகளை இவர்கள் மேலுமேலும் பின்பற்றுவாராக. இது செய்யாவிடின் இவர்கள் கூலிக்கு மாரடிப்பவரே யாவர்.

1921. தி. சே.

# தமிழின் பூருவோத்தரம்
# Origin of Tamil

இந்தியாவில் குடியேறிய மகப் பழைய குடிகளில் திராவிடர் ஒரு பிரிவினர். பாஷையின் போக்கினாலும் உடற்கூற்று வண்ணத்தாலும் இவர்கள் உலகினரில் மங்கோலிய பிரிவினைச் சேர்ந்தவர்களென்பது இவ்வாராய்ச்சியில் மிக்கவருடைய யூகை. இவர்கள் இமய மலையின் கீழ்ப்பாரிசமாய் வந்து இந்தியாவில் குடியேறியிருத்தல் வேண்டும். இமயமலை நேபாளதேசத்தில் உள்ள கட்டடங்களின் அமைப்பும் பெண்களின் ஒழுக்கமும் மலையாளதேசத்தில் உள்ள கட்டடங்களின் அமைப்பையும் பெண்களின் ஒழுக்கத்தையும் ஒத்திருப்பது இதற்குச் சான்றாகும்.

சீனபாஷையில் ஞான் (நான்), யாம், நீ, பெண், எம் (எங்கு), கண் (இடப்பெயர்), ஈர் (இரண்டு), மை (கருமை) என்பன வழங்குதலாலும், திபெத்திய பாஷைகள் சிலவற்றில் ழகரம் வழங்குதலாலும், தமிழர் இந்தப் பிரிவில் ஒரு சாகையே யென்று காலஞ்சென்ற கனகசபைப் பிள்ளை துணிந்தார். மச்சபுராணம் விஷ்ணுபுராணம் முதலியன வங்கதேசத்தின் (வங்காளத்தின்) தென்பகுதியில் டமிலிட்டிகள் அல்லது டாம்ரலிட்டிகள் என்னும் ஒரு தனி ஜாதியார் வசித்திருந்தனரென்று உரைக்கின்றன. இக்காலத்தில் கல்கத்தாவின் தெற்கில் முப்பத்தைந்து மைல் தூரத்தில் கங்கையின் முகத்துவாரத்தில் ஹூக்ளிநதியின் பிரிவாகிய ருப்நாராயன் தீரத்தில் உள்ள டமுலக் என்கிற துறைமுகப்பட்டினம் முற்காலத்தில் டமிலிட்டி (டாம்ரலிட்டி) என்று வழங்கியிருந்தது. ஆகவே கங்காதீரத்திலுள்ள இந்தப் பட்டினம் ஆதியில் தமிழர்கள் சிறப்புற்று நிலைத்திருந்த இடமாதல் வேண்டுமென்பதும் அவர் துணிவு. வேளாளர்கள் தங்களைக் கங்கைக் குலத்தினரென்றும் கங்கா புத்திரரென்றும் வழங்குவதும் இதற்கேற்ற சான்றாகின்றது.

இந்தியாவில் பேச்சுவழக்குள்ள பாஷைகளை வடக்கில் பஞ்ச கௌடம் என்றும் தெற்கில் பஞ்ச திராவிடம் என்றும் வடமொழிப்

புலவர் வரையறுத்திருந்தனர் அவைகளில் பஞ்ச திராவிடமாவன: திராவிடம், கர்ணாடகம், மஹாராஷ்ட்ரம், கூர்ச்சரம், தெலுங்கு என்பன மஹாராஷ்ட்ரமும் கூர்ச்சரமும் தெற்கில் வழங்கும் பாஷைகளோடு சில கூறு ஒப்பினும், ஏனைத் திராவிட பாஷைகளோடு வெகுவாய் வேறுபடுதலால், அவ்விரண்டையும் வடபிரிவைச் சேர்ந்தவைகளாகவே கொள்வது தகுதி. தெற்கில் வழங்குமவைகளில் முக்கியமானவை கன்னடமும் தெலுங்கும் தமிழுமே மலையாளமும் துளுவமும் குடகமும் சிறிது விர்த்தியடைந்து மேற்கூறிய மூன்றோடு சேர்க்கப்படுவனவாயின விர்த்தியடையா, திராவிட பாஷைகள் தோட, கோட, காண்ட், ஓரயன், ராஜ்மஹால் என்பவை

முக்கியமான ரூடிகள் (roots) அநேகம் இவைகளில் பொதுவானவை பெயர் வினைவிகற்பங்களும இலக்கணப்போக்கும் வாக்கியப்போக்கும் பொதுவானவையே இவைகளில் செயப்பாட்டு வினைப்பிரயோகம் இயல்பாக இல்லை வேற்றுமையுருபு முதலானவை சொற்களுக்குப் பின்பே வரும் இக்கூறுகளில் இவை ஆரிய பாஷைகளுக்கு முற்றும் வேறானவை சீன முதலிய பாஷைகளின் சொற்கள் ஓரசையானவை இந்து-யூரொப்பிய பாஷைகளின் சொற்களானவை ஈரசை ரூடிகள் உள்ளுக்குள்ளே விகற்பத்தாலானவை. திராவிட பாஷைச சொற்களோ ரூடியோடு இடைநிலை சாரியை விகுதி முதலியன ஒட்டிநிற்கும் ஒட்டுச்சொற்கள்

திராவிடம் என்கிற வார்த்தை நெடுங்கால வழக்காறுடையது இந்தியாவின் தெற்கிலுள்ளவர்களைத திராவிடரென்றும் அவர்களுடைய பாஷைகளைத் திராவிடம் என்றும் வடமொழிவாணர் வழங்கிவந்தனர் திராவிடம் என்பது த்ரமிடோபநிஷத் என்பதிற்போலத் திரமிடம் என்றும் வழங்கியிருந்தது சிங்களத்தீவில் பாலிபாஷையில் எழுதியிருக்கும் மஹாவம்சம் என்னும் சரித்திரக் குறிப்பில் இது தமிளோ என வழங்கி யிருக்கிறது ரோமர்களுடைய பூமிப்படங்களில் இந்தியாவின் தெற்கில் பெரும்பாகம் ஆன்ட்ரோ இண்டி என்றும் டமிரிகே என்றும் குறித்திருக்கின்றது. ஆன்ட்ரோ என்பது ஆந்த்ரமாகிய தெலுங்காதல் வேண்டும். டமிரிகே என்பது தமிழகமாதல் வேண்டும். கி. பி. ஏழாவது நூற்றாண்டின் இறுதியிலிருந்த வட

மொழிப புலவரான குமாரிலபடடா தெலுஙகையும தமிழையும ஆநதர
தராவிடபாஷா என வழஙகியிருககிறா இதுகாறும கூறியவறறால
திராவிடம எனகிறவாாததை நாளடைவில தமிழையே குறிபபதாயிறறு
நாலாயிர திவவியபபிரபநதததைப பிராமணாகள திராவிடவேதம என
வழஙகிவிடடனா தமிழ சீாகிருததமெயதி எனையவறறினும சிறப
புறறதே இதறகுக காரணம

முதறசஙகம ஏறபடடு அகஸதியா இலககணஞ செயயு முனனரே
தமிழிலககியம இயறறமிழ இசைசசதமிழ நாடகததமிழ என மூததிறதத
தாக வழஙகியிருநதது ஆகவே அகததியா செயத இலககணததில முக
கூறறிலககணமும வரையறுததிருநதது இயறறமிழிலககியஙகள அகப
பொருளும புறபபொருளும உரைததிருநதன அகப பொருளாவது
தலைவனும தலைவியும கூடிய களவொழுககம கறபொழுககஙகளை அக
காலவியலபை யொட்டி செயயுளகளில கூறிய பொருளாம புறப
பொருளாவது அறமும பொருளும ஆகிய இரணடையும விரிததுரைப
பதாம இஙஙனம உலகியலாக உளளபொருளகளைக கூறியது இயற
றமிழாம செயயுளகளின ராககாளஙகளை விரிபபது இசைத தமிழா
யினது இசையிலககணமும கூததிலககணமும நாடகத தமிழாயின
தலைசசஙக இடைசசஙக நூலகள பாணடிநாடடின தெனபகுதியைக
கடலகொணட காலதது அழிவுறறன எஞசினினற இயறறமிழிலக
கியஙகள சிறசிலவு இயறறமிழிலககணஙகள சிலவுமே

இயறறமிழிலககணஙகளில அகததியததுககு வழிநூலாயுளளது
அகததியா மாணாககரான தொலகாபபியா செயத இலககணமே இந
நாளகாறும வழஙகிவருகினறது தொலகாபபியம எழுதது சொல
பொருள எனனும மூனறதிகாரமுளளது பொருளதிகாரததில யாபபு
அணி அகமுமபுறமுமாகிய பொருள எனகிற மூனறும உணடு
ஆகவே தமிழிலககணம எழுதது சொல யாபபு அணி பொருள என
னும ஐநது பகுதியினையுடையது ஆதலால தமிழிலககணம பஞச
லககணம உரைபபதாகும

# பஞ்சலட்சணம்.

## I. எழுத்து—Orthography.

### எழுத்து

*மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி*
*எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே* (நன்—58)

குறிப்பு—மொழிமுதற்காரணம் ஆம் ஒலி—சொல்லுக்கு முக்கிய காரணமாகிய ஒலி.

அணுத்திரள் ஒலி—அணுத்திரளின் காரியமாகிய ஒலி.

அணு—செவிப்புலனும் அணு: அது ஒலிநுட்பம்

எழுத்துக்கு முதற்காரணம் அணுக்கூட்டம்: மொழிக்கு முதற் காரணம் எழுத்து.

எழுத்தாவது, சொல்லுக்கு முக்கிய காரணமும் அணுத்திரளின் காரியமுமாகிய ஒலி. அது முதலெழுத்தென்றும் சார்பெழுத்தென்றும் இரண்டு வகையினை யுடையது.

"எழுத்தாவது தன்னையே உணர்த்தியுஞ் சொற்கு புயைந்தும் நிற்கும் ஓசை கடலொலி சங்கொலி முதலிய ஓசைகள் பொருளுணர்த்தாமையாலும், முற்கு வீளை இலதை முதலியன பொருளுணர்த்தினவேனும் எழுத்தாகாமையானும் அவை ஈண்டுங் கொள்ளப் படா"—நச்சினார்க்கினியர். முற்கு—கெற்கிதம்—முழக்கம். வீளை—சத்தம். சீழ்க்கை—நாவின் நுனியைக் கோலி ஊதும் ஒருவகை ஒலி. முற்கு வீளை இலதை யென்பன அடிநாவடியிற் காட்டப்படும் ஒலிக் குறிப்பு.

### முதலெழுத்து

*உயிரு முடம்புமா முப்பது முதலே* (59)

*அம்முத லீரா றாவி கம்முதல்*
*மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்* (63)

குறிப்பு.—ஆவி—உயிர். அகர முதலிய பன்னிரண்டும் உயிர் போலத் தனித்து நடக்கும் வன்மையுடைமையால் உயிர் எனப்பட்டன.

ககரமுதலிய பதினெட்டும், உயிரோடு கூடியல்லது நடக்கும் வன்மையில்லாத உடல் (மெய்) போல, அகரத்தோடு கூடியல்லது நடக்கும் வன்மையின்மையால் மெய்யெனப்பட்டன.

அ இ உ எ ஒக்குறி லைந்தே. (64)
ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔநெடில். (65)
அ இ உம்முதல் தனிவரிற் சுட்டே. (66)

குறிப்பு.—அகரம் தூரப்பொருளையும், இகரம் சமீபப்பொருளையும், உகரம் எதிர்முகமின்றிப் பின்னிற்கும் பொருளையும் சுட்டும். உகரம் நடுவிலுள்ள பொருளைச் சுட்டும் என்றும் சிலர் கூறுவர்.

எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏயிரு வழியும் வினாவா கும்மே. (67)

எவன் — யாவன்: எக்கொற்றன்—யாங்ஙனம்
கொற்றனா—கொற்றனோ
எவன் —கொற்றனே.

வல்லினம் கசட தபற வென வாறே (68)
மெல்லினம் ஙஞண நமன வென வாறே. (69)
இடையினம் யரல வழள வென வாறே. (70)

குறிப்பு.—மும்மூவகை யெழுத்துக்களும், வலி மெலி இடையென்றும், வன்கணம் மென்கணம் இடைக்கண மென்றும், வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத் தென்றும், வன்மை மென்மை இடைமை யென்றும் பெயர் பெறும்

வல்லென்றொலித்தலாலும் வல்லெனத் தலைவளியாற் பிறத்தலாலும் வல்லெழுத்தாயிற்று மெல்லென்றிசைத்தலாலும் மூக்கின் வளியாற் பிறத்தலாலும் மெல்லெழுத்தாயிற்று இடைநிகர்த்தாய் ஒலித்தலாலும் இடைநிகர்த்தாய் மிடற்றுவளியாற் பிறத்தலாலும் இடையெழுத்தாயிற்று.

சார்பெழுத்து

உயிர்மெய் ஆய்தம் உயிரள பொற்றள
பஃகிய இ உ ஐ ஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும். (60)

குறிப்பு.—சார்பெழுத்தாவது, முதலெழுத்துக்களைப்போல் தனித்து நடத்தலின்றிச் சார்ந்துவரும் எழுத்து (சார்பு—சார்தல்) தம்மொடு தாம் சார்ந்தும் மொழியைச் சார்ந்தும் வருகிற முதன்மையில்லாத எழுத்து. உயிரளபெடை—ஒற்றளபெடை—குற்றியலிகரம்—குற்றியலுகரம்—ஐகாரக்குறுக்கம் — ஔகாரக்குறுக்கம் — மகரக்குறுக்கம் என்பவை முதலெழுத்தின் விகாரமேயன்றி வேறெழுத்தல்லாமையாலும், ஆய்தம் உயிரெழுத்துமாகாது மெய்யெழுத்துமாகாது அவைகளுக்கு வேறுமாகாது வருதலாலும், சார்பெழுத்துக்கள் அப்பிரதானமாயின.

**உயிர்மெய்.**

*புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்*
*ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்*
*உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்*
*பெயரொடு மொற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்.* (89)

குறிப்பு — உயிர்மெய் உயிரும் மெய்யுமாகிய இரண்டிடத்துப் பிறந்த எழுத்து அவை ககரமுதல் னௌகாரமீறாய்க் கிடந்த இருநூற் றுப்பதினாறு. பன்னீருயிரும் பதினெண் மெய்யொடுங் கூடப் பன்னிரு பதினெட்டு இருநூற்றுப் பதினாறும் மெய்களெல்லாம் உயிரோடு கூடி உயிர்க்குங்கால் அம்மெய்கள் புள்ளிவடிவம் நீங்கி

அகரத்தோடு கூடுங்கால், அவ்வடிவைத் தம்முள் அடக்கிப் பழைய வடிவாகியும்,

ஆகாரத்தோடு அதன் குறிவடிவே அருகே காலாகியும், ணகா றகர னகரமாகிய இம்மூன்றும் அதன் கீழ் வளைந்த வடிவாகியும்,

இகரத்தோடு அதன் குறியாகிய மேல் விலங்கு வடிவாகியும்,

ஈகாரத்தோடு அம்மேல் விலங்குடன் அதன் உறுப்புக்குறி வளைந்த புள்ளி வடிவாகியும்,

உகரத்தோடு ககா — டகர — மகர — ரகர — ழகர — ளகரமாகிய இவ்வாறும் உகரத்தின் தலைக்குறியாகிய கீழ்விலங்கு வடிவாகியும், ஙகர — சகர — பகர — யகர — வகரமாகிய இவ்வைந்தும் அதனிடை வடிவாகியும், ஞகர — ணகர — தகர — நகர — லகர — றகர — னகர இவ் வேழும் அதன் கீழ்வடிவாகியும்,

ஊகாரத்தோடு ககரமொன்றும் அதன் முதல் வடிவாகியும், மற் றைய வைங்கும் அதன் தலையின் சுழி வடிவாகியும், ஙம்முதலைந்தும் அதன் தலையின் வளைந்த வடிவாகியும், ஞம் முதலிய வேழும் அதனு றுப்பு வடிவாகியும்,

எகர ஏகாரத்தோடு அவற்றின் முதற்குறியாகிய கோடு வடி வாகியும்,

ஐகாரததோடு அதன் குறியாகிய இருகோடு இணைந்த வடிவாகியும், அவைதன்றி ண — ள — ல — ன ஆகிய இந்நான்கும் அதனிடையின் வடிவாகியும்,

ஒகர ஓகாரத்தோடு முன்னர் அவற்றின் முதற்குறியாகிய கோடு வடிவொடு அருகே அவற்றின் கால் வடிவாகியும், ணகர—றகர—னகர மாகிய மூன்றும் அவற்றின் வளைந்த வடிவாகியும்,

ஓளகாரத்தோடு முன்னர் அதன் முதற்குறியாகிய கோடு வடிவோடு அருகே அதனுறுப்பு வடிவாகியும் நிற்க இவற்றைத் தொல் லாசிரியர் மெய்யும் உயிரும் வேறாக எழுதாது இவ்வாறு குறியிட் டெழுதினர்.

இவை மெய் முன்னாகவும் உயிர் பின்னாகவும் உச்சரிக்கப்படும்.

மெய்கள் தம்மேலேறிய உயிரினளவே தமக்களவாகிவரும். இரு வயின்பெயர் – உயிரும் மெய்யுமாகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர் மெய் என்னும் பெயர்.

## மெய்களின் ஏறிய உயிர்களின் குறிகள்.

| | | | |
|---|---|---|---|
| அ | ○ இப்புள்ளி யொழிவு | ...................... | க |
| ஆ | ா — பின்கால் | ...................... | கா |
| | ‿ — கீழ்ப்பிறை | ...................... | ஞா |
| இ | ி — மேல்விலங்கு | ...................... | கி |
| ஈ | ீ — சுழிமேல்விலங்கு | ...................... | கீ |
| உ | ‿ — கீழ்விலங்கு | ...................... | கு |
| | ┌ — இறங்குகீற்று | ...................... | சு |
| | ு — மடக்கேறுகீற்று | ...................... | ஞு |
| ஊ | ூ — பின்வளை தலைக்கீற்று | ...................... | கூ |
| | ‿ — இறங்கு கீற்றுக் கீழ்விலங்கு | ...................... | சூ |
| | ூ — மடக்கேறு கீற்றுக்கால் | ...................... | ஞூ |
| எ | ெ — முன்கோடு | ...................... | கெ |
| ஏ | ே — முன்சுழிக்கோடு | ...................... | கே |
| ஐ | ை — முன்னிணைக்கோடு | ...................... | கை |
| | ஃ — முன் வளைதலைக் கீற்று | ...................... | ணை |
| ஒ | ெ — ா — முன்கோடு—பின்கால் | ............. | கொ |
| | ெ — ‿ — முன்கோடு—கீழ்ப்பிறை | ............ | ஞொ |
| ஓ | ே — ா — முன்சுழிக்கோடு—பின்கால் | ........ | கோ |
| | ே — ‿ — முன்சுழிக்கோடு—கீழ்ப்பிறை | ...... | ஞோ |
| ஔ | ெ — ள — முன்கோடு—பின்கோட்டுக்கால் | .. | கௌ. |

"உருவுதிரிந் துயிர்த்தலாவது, மேலுங் கீழும் விலங்குபெற்றும், கோடுபெற்றும், புள்ளிபெற்றும், புள்ளியுங்கோடும் உடன்பெற்றும், உயிர்த்தலாம். கி — கீ முதலியன மேல்விலங்கு பெற்றன. கு — கூ முதலியன கீழ்விலங்கு பெற்றன. கெ — கே முதலியன கோடு பெற்றன. கா — ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர். கொ — கோ — ஙொ — ஙோ முதலியன புள்ளியுங்கோடும் உடன்பெற்றன....உயிர்மெய் என்பது உம்மைத்தொகை" என்று நச்சினார்க்கினியர் உரைத்திருக்கிறார்.

**ஆய்தம்** — குற்றெழுத்தின் முன்னதாய் உயிரொடுகூடிய வல்லெழுத்தாறன் மேலிடத்தாய் வரும் மூன்று புள்ளி வடிவாகிய எழுத்து.

சூலாயுத வடிவாய் எழுதப்பட்டதால் இது ஆய்தம் என்று பெயர் பெற்றது.

எஃகு — கஃசு — கஃடு — கஃது — கஃபு — கஃறு — அஃகான் — மஃகான்—வெஃகாமை—அஃகி என்றிங்ஙனம் வரும். இது தனிநிலையெனவும் பெயர் பெறும் (தனிநிலை — ஒன்றையும் சார்ந்துவராமை). மூன்று புள்ளி வடிவாய் எழுதப்படுதலால் முப்புள்ளி எனவும பெறும். இது அஃகேனம் என்றும் வழங்கும்.

இப்படி ஆய்தம் எங்கும் குற்றெழுத்துக்கும் வல்லெழுத்துக்கும் நடுவேயே வரும்.

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. (90)

உயிரளபு — உயிரளபெடை. ஒற்றளபு—ஒற்றளபெடை. அஃகிய இ — இகரக்குறுக்கம்-குற்றியலிகரம். அஃகிய உ — உகரக்குறுக்கம்—குற்றியலுகரம். அஃகிய ஐ —ஐகாரக்குறுக்கம். அஃகிய ஔ — ஔகாரக்குறுக்கம். அஃகிய மஃகான்—மகரக்குறுக்கம். அஃகிய தனிநிலை—ஆய்தக் குறுக்கம். இவற்றின் இலக்கணம் பின்னால் வேண்டிய இடங்களில் கூறப்படும்.

சார்பெழுத்துக்கள் "சார்ந்துவரல் மரபின் மூன்று" என்பதும் "அவைதாம், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தமென்ற முப்பாற் புள்ளியும்" என்பதும் தொல்காப்பியம்.

- எழுத்து
  - முதலெழுத்து.
    - உயிர்.
    - மெய்.
  - சார்பெழுத்து
    - உயிர்மெய்.
    - ஆய்தம்.
    - உயிரளபெடை.
    - ஒற்றளபெடை.
    - குற்றியலிகரம்.
    - குற்றியலுகரம்
    - ஐகாரக்குறுக்கம்.
    - ஔகாரக்குறுக்கம்.
    - மகரக்குறுக்கம்
    - ஆய்தக்குறுக்கம்.

**சந்தியக்கரம்.**

*அம்முன் இகரம் யகர மென்றிவை*
*எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோடு*
*உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன.* (125)

குறிப்பு —சந்தியக்கரம் (இணையெழுத்து) என்பார் "ஒத்து எய்தின் ஐ (இசைக்கும்) என முடிப்பர்.

"அகர இகரம் ஐகாரமாகும்"; "அகர உகரம் ஔகாரமாகும்"; "அகரத் திம்பர் யகரப் புள்ளியும், ஐ யெனெ நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்பன தொல்காப்பியம்.

இங்ஙனம் சில வெழுத்துக்கள் கூடிச் சில வெழுத்துக்கள்போல இசைத்தலால் இவை எழுத்துப்போலி எனவும் படும். இங்ஙனங் கொள்வார் "இவை ஒத்திசைக்கும்" என முடித்துக் கொள்வர்.

**எழுத்துக்களின் உருவம்.**

*தொல்லை வடிவின எல்லா வெழுத்தும். ஆண்*
*டெய்தும் எகர ஒகர மெய் புள்ளி* (98)

குறிப்பு —"மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" என்றும், "எகர ஒகரத் தியற்கையு மற்றே" என்றும் (மகரமானது ப் என்பது) "உட்பெறு புள்ளி உருவாகும்மே" என்றும் தொல்காப்பியம் கூறுதலால், மெய்யெழுத்துக்களும் எகரமும் ஒகரமும் மகரமும் அவர் காலத்துக்கு முன்னரே க் ங் என்றும், எ̇ என்றும் ஒ̇ என்றும் ப̆ என்றும் வழங்கியிருந்தன. நன்னூலார் காலத்துக்கு முன்னரே மகரம் உட்பெறு புள்ளியை விளக்கெழுதலாயிற்று அதனால் அவர் அதைக் கூறிற்றிலர்.

"எ ஒ என்னும் உயிர்க் குற்றெழுத்தும், இவ்விரண்டு மேறின கெ — கொ முதலிய உயிர்மெய்க் குற்றெழுத்தும், க் — ங் முதலிய மெய்யெழுத்தும் மேலே — o — இப்படி ஒரு புள்ளியிட் டெழுதப் படும்" என்று சொல்லி, அதன்கீழ் எவன் — ஒப்பு — கெண்டை — கொண்டை என்பனவற்றைக் காட்டியுள்ளார், தாம்செய்து இ — பி — 1828 — ம் ஆ அச்சிட்ட இலக்கண வினுவிடையில் தாண்டவராய முதலியார் என்னும் பெரும்புலவர். பின்னும், நெடுங்கணக்கினுள் முற்காலத்து வழங்கின வரிவடிவிற்கும் இக்காலத்தில் வழங்கும் வரி வடிவிற்கும் வேறுபாட்டை .

.... .

| இக்காலத்தில் | | | முற்காலத்தில் |
|---|---|---|---|
| கா | .... | .... | கo |
| கொ | .... | .... | கெo |
| கௌ முதலிய | | .... | கெo\|\| |
| ம | .... | .... | ப (மேலே o) |
| ஊ | .... | .... | உo\|\| |

எனக் காட்டியிருக்கிறார்.

தமிழ்ச் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்.

*றனழஎஒவ்வும், உயிர் மெய்யும் உயிரள*
*பல்லாச் சார்பும் தமிழ். பிற பொதுவே.* (150)

குறிப்பு.—தமிழில் உள்ள முதலெழுத்தை வடமொழி யெழுத் தோடு ஒத்திட்டுப் பார்க்கு மிடத்தில் இருபத்தைந்து எழுத்துக்கள் தமிழ்க்கும் வட மொழிக்கும் பொதுவானவை என்பதும், எ—ஒ—ழ—ற— ன—என்னு மைந்தும் தமிழ்க்கே உரிய சிறப்பெழுத்துக்களே என்பதும் விளக்கமாகும். இவ்வைந்தனுள்ளும் ழகரம் வேறெந்த மொழியிலும் வழங்குவதில்லை. வடமொழியே தமிழ்மொழிக்கு மூலபாஷை என்று நம்பிய சுவாமிநாததேசிகர் தமது இலக்கணக்கொத்தில் "அன்றியும் ஐந்தெழுத்தாலொரு பாடையென், றறைடவே நாணுவர் அறிவுடை யோரே", எனக் கூறியது தமிழ்க்கேயுரிய சிறப்பெழுத்துக்களை நோக் கியே. வடமொழி நெடுங்கணக்கிலிருந்து தமிழில் வந்து வழங்குகிற எழுத்துக்களும் சில உண்டு. அவை ஜ—ஶ—ஷ—ஸ—ஹ—க்ஷ என்பவை. உ-ம். புஜம்—பாஶம்—மேஷம்—வாஸம்—மஹாராஜன்—பக்ஷம்.

**தமிழ் நெடுங்கணக்கில் உள்ள மிகையும் குறையும்.** — தமிழ் மொழிகளின் உச்சாரணத்துக்கு அவசியமான ஒலிகள் நாற்பது. வரி வடிவில் அவற்றைக் குறிப்பதற்கு உள்ள எழுத்துக்கள் முப்பத்தொன்றே. ஆகவே மற்ற ஒன்பதொலிகளுக்கும் ஒன்பது தனிவேறெழுத்துக்கள் இன்மை தமிழ் நெடுங்கிற்கு ஒரு குறையே என்னலாம். தமிழேயான சொற்களில் வல்லெழுத்துக்களை எடுத்தொலிப்பதற்கான குறிகள் இல்லை. இனமான மெல்லொற்றையும் சில இடையெழுத்தையும் அடுத்துவரும் வல்லினம் எடுத்தொலிப்பதே இயற்கையாதலால் அவ்விதமான குறிகள் வேண்டுவனவல்ல. மெல்லின இடையினங்களை அடுக்காமல் தனியாகவே க ச ப என்பவை புகுதல் வசித்தான் வருபவன் என்ற சொற்களிற்போல வேறு புதிய ஒலிகளாக உச்சரிக்கப்பெறும். உரிய எழுத்துக்களில்லாமை குறையே. இணையெழுத்தாகக் கொள்ளினும் எழுத்துப்போலியாகக் கொள்ளினும் ஐகார ஔகாரங்கள் மிகையே என்னலாம். ஐகார ஔகாரங்களையும் அவை ஊர்ந்துவரும் உயிர்மெய்களையும் ஒழிப்பினும் தமிழ் இடர்ப்படாது. ங்—ஙு இரண்டு தவிர ஙகரவருக்கத்தில் மற்றையவெல்லாம் மிகையே. நகரமும் னகரமும் பிறப்பளவில் வெகுவாய் வேறுபடாமையாலும், இரண்டும் மெல்லினமே யாகையாலும், இவ்விரண்டும் வேண்டா, ஒன்றே அமையாதோ எனின், நகரம் தகரத்துக்கே இனமாய்த் தந்நகரமென்றும் னகரம் றகரத்துக்கினமாய் றன்னகரமென்றும் வழங்கப்படுவனவாயின: னகரத்தோடு தகரமும் நகரத்தோடு றகரமும் மயங்குதலில்லை. ஒன்றே கொண்டால், முந்நூறு—முன்னூறு எந்நாடு—என்னாடு என்னும் தொடர்மொழிகளில் சந்தியிடர்ப்பாடு உண்டாகும்; பொருட்டெளிவுங் கெடும். ஆதலால் இரண்டும் வேண்டும் என்பதே விடை. இடையின ரகரம் வல்லின றகரம் ஆகிய இரண்டில் ஒன்றை ஒழித்துவிடலாமே எனினும் இவ்வித இடர்ப்பாடுகளோடு தனிமொழிகளில் பொருண்மலைவும் உண்டாமாதலால் அங்ஙனம் ஒழிப்பது ஆகாது.

ஹிந்துஸ்தானி — பாரஸீகம் — இங்க்லீஷ் முதலான பாஷைகளிலிருந்து தமிழில் வந்துவழங்குதலான சொற்களை வரிவடிவில் அமைத்துக்காட்டத் தமிழ் நெடுங்கணக்கில் போதிய எழுத்துக்கள் இல்லை.

**தமிழ் நெடுங்கணக்கின் வரலாறு.**—தமிழெழுத்துக்களும் கிரந்த எழுத்துக்களும் தேவநாகரியெழுத்துக்களிலிருந்தோ அதற்கு முந்திய அசோக மகாராஜனுடைய சிலா சாசன வெழுத்துக்களிலிருந்தோ உண்டானவை என்பதும், தென்னாடுகளில் பனையேடுகளில் எழுத்தாணிகொண்டெழுதும் வழக்கத்தால் அவை உருவு திரிந்தன என்பதும், சிலருடைய கொள்கை. மலையாளத்தில் உள்ள யூதரும் ஸிரியன் கிறிஸ்தியரும் பெற்றுள்ள ராஜ சாசனங்கள் தமிழ்மொழியில்

எழுதியுள்ளன. அந்த சாசனங்களில் ஒன்று கி—பி 774 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. தமிழ் நெடுங்கணக்கின் மிகப் பழமையான வரிவடிவில் அவை எழுதியிருக்கின்றன. அவற்றை வட்டெழுத்தென்பர் சாசன சர்ச்சை செய்வோர். அவ்வடிவு ஏறக்குறைய கி—பி பத்தாவது நூற்றாண்டில் வழக்கிழந்ததாகக் காண்கிறது. அப்பால் ராஜசாசனங்களாகிய கல்வெட்டுகளைக் கோலெழுத்தென்பர் (கோல் — செங்கோல்).

அகத்தியர் தமிழ்நாட்டில் புகுதற்கு முன்னரே தமிழில் இயல் இசை நாடகமான இலக்கிய விலக்கணங்கள் வழங்கியிருந்ததனால், தமிழ் நெடுங்கணக்கு வேறு நெடுங்கணக்கினின்றும் பிறந்ததன் றென்பதே துணிவு. அதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. மிக்க வீரத்துடனே போர்புரிந் திறந்த வீரனது ஞாபக சின்னமாகக் கல் நடுதல் என்று முற்காலத்தில் தமிழ் நாட்டில் ஓர் ஐதிகம் உண்டு. அதாவது கழல்வீரர் நீண்ட கல் ஒன்று கொண்டுவந்து அதனை மஞ்சன மாட்டி மடையும் மதுவும் மலரும் முதலியன கொடுத்து விழாநடத்திக் கல்லில் இறந்த வீரனது பெயரும் பீடும் எழுதி ஓரிடத்தில் நடுதலாம். இந்த ஐதிகத்தால் தமிழர் அசோகனுக்கு முந்தியே தமிழ் நெடுங்கணக் குடையார் என்பது விளங்கும்.

கடைச்சங்கக்காலத்து நிகண்டாகிய திவாகரம்

> "பெயரெழுத்து முடிவெழுத்து வடிவெழுத்துத் தன்மை
> யெழுத்தென எழுத்தின் பெயரியம் பினரே"

என்றும், அக்காலத்து நிகண்டாகிய பிங்கலந்தையும்

> "வடிவுபெயர் தன்மைமுடிவு நான்கெழுத்தே"

என்றும் உரைக்கின்றன. அவற்றுள் வடிவெழுத்தென்பன பூர்வ எகிப்தியர் வழங்கியதுபோன்ற சித்திரக்குறிகள்.

பெயரெழுத்தென்பன சீனர்போல ஒவ்வொரு பெயரை உணர்த்துதற்கு இட்டு வழங்கும் சங்கேதக் குறிகள்.

தன்மையெழுத்தென்பன குணங்கள் சக்திகள் முதலியவற்றைக் குறித்தற்கு வழங்கிய அடையாளங்கள்.

பூர்வ எகிப்தியர்கள் விவேகத்தைக் கண்ணும் எறும்பும், அறிவின்மையை ஈயும், நன்றியின்மையை விரியன் பாம்பும், வெற்றியைக் கருடனும், தந்திரத்தை நரியுமாகக் குறித்து வழங்கியது இதற்கு உதாரணம். முடிவெழுத்தென்பன வினை நிகழ்ச்சியை உணர்த்தும் வாக்கியங்களைக் குறிக்க வழங்கிய அறிகுறிகள். இரண்டு அல்லது பல பிராணிகளின் அவயவங்களை ஒன்றாகக் கலந்து ஓருருவம் அமைத்து ஒரு விஷயத்துக்கே குறியாக வழங்குவது எகிப்தியர் முறை.

மேற்கூறியதுபோலவே யாப்பருங்கல விருத்தியானது "உருவே யுணர்வே ஒலியே தன்மையென" மற்றோர் எழுத்துவகை காட்டி, அவற்றுள்

காணப்பட்ட உருவமெல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப் படுவது உருவெழுத் தாகும்"

என்றும்,

கொண்டவோர் குறியால் கொண்ட வதனை
உண்டென் றுணர்வது உணர்வெழுத் தாகும்

என்றும்,

இசைப்படு புள்ளின் எழாஅலொடு புணர்ந்து
செவிப்புல னாவது ஒலியெழுத் தாகும்

என்றும்,

முதற்கா ரணமும் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய உணர்வும்
அமைந்தொடு புணர்ந்த அகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந் திசைப்பது தன்மையெழுத்தே

என்றும் விளக்குகின்றது [இவை செந்தமிழ்ப் பத்திரிகையிற் கண்டவை]

மாத்திரை (இன்னதென்பது)

இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை. (100)

எழுத்துக்களின் மாத்திரை.

மூன்றுயிரள பிரண்டாம் நெடில். ஒன்றே
குறிலோ டையௌக் குறுக்கம் ஒற்றள(பு).
அரையொற் றிஉக் குறுக்கம் ஆய்தம்.
கால்குறள் மஃகான் ஆய்த மாத்திரை. (99)

மாத்திரைக்குப் புறநடை.

ஆவியும் ஒற்றும் அளபிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின். (101)

# எழுத்தியலுக்கு அநுபந்தம்

## தொல்காப்பியம்

**எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும்.**

*எழுத்தெனப்படுப*
*அகரமுதல்*
*னகர இறுவாய் முப்பஃ தென்ப,*
*சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.*

குறிப்பு — *சார்ந்துவரல் மரபின்மூன்று = சார்ந்துவருதலைத் தமக்கு இலக்கணமாகவுடைய மூன்று (சார்பெழுத்து மூன்று) அலங்கடை = அல்லாத விடத்து.*

**சார்பெழுத்துக்களது பெயரும் முறையும்.**

*அவைதாம்*
*குற்றிய லிகரம் குற்றிய லுகரம்*
*ஆய்தமென்ற*
*முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன.*

குறிப்பு — *முப்பாற்புள்ளி = மூன்று கூற்றதாகிய புள்ளிவடிவு. எழுத்து ஓர் அன்ன—(முற்கூறிய) முப்பதெழுத்தோடு ஒரு தன்மைய வாய் வழங்கும்*

**மாத்திரைக்கு அளவு**

*கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை*
*நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே*

குறிப்பு — *இயற்கைமகன் தன் குறிப்பினன்றி, இரண்டிமையும் ஒருகாற்கூடி நீங்கின காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும் அதுபோலவே நொடித்தற்றொழி லிற் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும் அவ்வே—அவ் விரண்டே மாத்திரை—எழுத்தின் மாத்திரைக்கு அளவு*

*"நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு" என்பது ஆணைகூறுதல் (ஆணை—சான்றோர் கட்டளை)*

**குற்றெழுத்து.**

*அவற்றுள், அ இ உ,*
*எ ஒ என்னும் அப்பா லைந்தும்*
*ஓரளபிசைக்கும் குற்றெழுத் தென்ப.*

**நெட்டெழுத்து.**

*ஆ ஈ ஊ, ஏ ஐ,*
*ஓ ஔ என்னும் அப்பாலேழும்*
*ஈரளபிசைக்கும் நெட்டெழுத்தென்ப.*

**சுட்டு.**

*அ இ உ அம்மூன்றும் சுட்டு.*

**வினா.**

*ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா.*

**உயிர்.**

*பன்னீரெழுத்தும் உயிரென மொழிப.*

**மெய்.**

*னகர இறுவாய்ப்*
*பதினெண் ணெழுத்தும் மெய்யென மொழிப.*

**தனிமெய்யின் அளவு.**

*மெய்யின் அளவே அரையென மொழிப.*

குறிப்பு.—*அளவு – மாத்திரை.*

**சார்பெழுத்துக்களின் அளவு.**

*அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.*

குறிப்பு.—*அவ் இயல் நிலையும்–முற்கூறிய அரைமாத்திரையாகிய இயல்பின் கண்ணே நிற்கும்.*

**புள்ளிபெறுபவை.**

*மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.*
*எகர ஒகரத் தியற்கையும் அற்றே*

**உயிர்மெய்.**

*புள்ளியில்லா எல்லா மெய்யும்*
*உருவுருவாகி அகரமோ டுயிர்த்தலும்*
*ஏனையுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்*
*ஆயீரியல உயிர்த்த லாறே.*

குறிப்பு.—*உருவுருவாகி புள்ளிபெறுகின்ற காலத்து இயல்பாகிய அகர நீங்கிய வடிவே வடிவாகின்று, ஆயீரியல – அவ்விரண்டு இயல்பினையுடைய (ஆயீர் = அ + ஈர்). உயிர்த்தலாறு – ஒலிக்கும் முறைமை.*

**உயிர்மெய்யின் ஓசை நிற்கும் முறை.**

*மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே.*

**உயிர்மெய்யின் அளவு.**

மெய்யோடியையினும் உயிரியல் திரியா.

**வல்லெழுத்து.**

வல்லெழுத்தென்ப க ச ட த ப ற.

**மெல்லெழுத்து.**

மெய்யெழுத் தென்ப ங ஞ ண ந ம ன.

**இடையெழுத்து.**

இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள.

# II. சொல்—Etymology.

**சொல்லின் பொதுவிலக்கணம்.**

*எல்லாச் சொலலும் பொருள் குறித்தனவே.*

(தொல்-சொல்-பெயரியல்—1.)

குறிப்பு.—"சொல்லாவது எழுத்தினன் ஆக்கப்பட்டு இருதிணையும் பொருட்டன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசை. பொருட்டன்மையாவது மக்கட்டன்மையும் இயங்குதிணைத்தன்மையும் நிலைத்திணைத்தன்மையுமாம். கருவியாவது அப்பொருட்டன்மையை ஒருவன் உணர்தற்கு அவ்வோசை கருவியாய்நிற்றல்."—நச்சினார்க்கினியர்.

"சொல்லென்பது எழுத்தினன் ஆக்கப்பட்டுத திணையறிவுறுக்கும் ஓசை: தன்னை உணர நின்றவழி எழுத்தெனப்படுந் தான் இடைநின்று பொருளுணர்த்தியவழிச் சொல்லெனப்படும்"—இளம்பூரணர் (உரையாசிரியர்)

பவணந்தியும் சொல் இன்ன தென்பதை "எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருடரின் பதமாம்" (128) என்று கூறினர். அச் சொற்றான் தனிமொழியும் தொடர்மொழியுமென இருவகைப்படும். தனிமொழி பொருள் விளக்குமாற்றைத் தொல்காப்பியர் "நிலம் தீ நீர் வளி விசும்போடைந்தும், கலந்தமயக்கம் உலகமாதலின், இருதிணை ஐம்பால் இயனெறி வழாஅமைத், திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்" என மரபியலில் விளக்கினர் தொடர்மொழி, இருமொழித்தொடரும் பன்மொழித்தொடருமென இருவகைப்படும்.

"உயர்திணை யென்மனர் மக்கட்சுட்டே; அஃறிணை யென்மனர் அவரல பிறவே, ஆயிருதிணையின் இசைக்குமன்சொல்லே" எனத் தொல்காப்பியர் சொல்லும் பொருளும் வரையறுத் துணர்த்தினர். அச் சொற்கள் பொருளுணர்த்துமாற்றைப் "பொருண்மை தெரித்தலும் சொன்மை தெரித்தலும், சொல்லினாகும் என்மனர் புலவர்" என்றும் "தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற்றோன்றலும், இருபாற்றென்ப பொருண்மைநிலையே" என்றும் கூறினர்

இவற்றை யெல்லாந் தொகுத்துப் பவணந்திமுனிவர்

"ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே" (259)

என்றார்.

**மூவகைமொழி.**

ஒருமொழி ஒருபொருளனவாம் தொடர்மொழி
பலபொருளன. பொது இருமையும் ஏற்பன. (260)

**இருதிணை.**

மக்கள் தேவர் நரகர் உயர்திணை.
மற்றுயி ருள்ளவும் இல்லவும் அஃறிணை. (261)

**ஐம்பால்.**

ஆண். பெண் பலரென முப்பாற் றுயர்திணை. (262)

ஆண்பால் விகுதி—அன்—ஆன்—மன்—மான்—ன்
பெண்பால் விகுதி—அள்—ஆள்—இ—ள்
பலர்பால் விகுதி—அர்—ஆர்—கள்—மார்—ர்—இர்.

ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை. (263)

ஒன்றன்பால் விகுதி—து.
பலவின்பால் விகுதி—அ—வை—கள்—வ்.

**மூவிடம்.**

தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே. (266)

**வெளிப்படை குறிப்பு.**

ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகுபெயர் அன்மொழி வினைக்குறிப்பே
முதறொகை குறிப்போ டின்னபிறவும்
குறிப்பிற் றருமொழி. அல்லன வெளிப்படை. (269)

**சொல்லின்வகை.**

அதுவே,—
இயற்சொல் திரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகும்: இடையுரி யடுத்து
நான்குமாம், திசை வடசொ லணுகாவழி. (270)

குறிப்பு.—இயற்சொல் திரிசொ லியல்பிற் பெயர்வினை = இயற் சொல்லும் திரிசொல்லுமென்னும் தன்மையையுடைய பெயர்ச்சொல் லும் வினைச்சொல்லும். இங்ஙனமே இடையுரி என்பவற்றோடும் "இயற்சொல் திரிசொலியல்பின்" என்பதை ஒட்டிக்கொள்ளவேண் டும். கொள்ளவே, சொல்லானது, பெயரியற்சொல்—பெயர்த்திரிசொல், வினையியற்சொல்—வினைத்திரிசொல், இடையியற்சொல்—இடைத்திரி சொல், உரியியற்சொல்—உரித்திரிசொல் என எண்வகைப்படுமென்ப தும், திசைச்சொல்லும் வடசொல்லும் சேர்ந்தவிடத்துப் பத்துவகைப் படுமென்பதும் பெறப்படும்.

இயற்சொல்.

செந்தமிழாகித் திரியாது யார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல். (271)

குறிப்பு.—செந்தமிழ் = செந்தமிழ் நிலத்துமொழி. இயற்சொல் = இயல்பாற் பொருளுணரும் சொல்.

> பெயரியற்சொல்—மண்—பொன்.
> வினையியற்சொல்—நடந்தான்—வந்தான்.
> இடையியற்சொல்—அவனை—அவனால் என்பவற்றில் ஐ—ஆல்.
> உரியியற்சொல்—அழகு—அன்பு.

திரிசொல்.

ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

குறிப்பு.—திரிசொல் = இயற்சொல்லின் வேறுபட்ட சொல். திரி தல்—வேறுபடுதல். வேறுபடுதல் என்றது இயற்சொல்போல இயல் பால் உணரப்படாது அரிதின் உணரப்படுதல்.

கிள்ளை-சுகம்-தத்தை என்பன கிளி என்னும் ஒரு பொருள் குறித்த பலபெயர்த் திரிசொல்.

வாரணம் என்பது யானையும் கோழியும் சங்கு முதலாகிய பல பொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல்.

படர்ந்தான்—சென்றான்—ஏகினான் என்பன போயினான் என்னும் ஒருபொருள் குறித்த பலவினைத் திரிசொல்.

சேறும்—வருதும் என்பவற்றுள் றும்—தும் என்னு விகுதிகள் தன் மைப்பன்மை யெதிர்காலம் என்னும் ஒருபொருள் குறித்த பல

விடைத்திரிசொல். கொல் என்பது ஐயமும் அசைநிலையுமாகிய பல பொருள் குறித்த ஓரிடைத்திரிசொல்.

சால—உறு—தவ—நனி—கூர்—கழி என்பன மிகுதி என்னும் ஒரு பொருள் குறித்த பலவுரித் திரிசொல். கடி என்பது காப்பு—கூர்மை—அச்சம்—கரிப்பு—விளக்கம்—சிறப்பு—மணம் முதலிய பலபொருள் குறித்த ஓருரித்திரிசொல்.

**திசைச்சொல்.**

செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப. (273)

குறிப்பு.—செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிருநிலம்—பன்னிரண்டு கொடுந் தமிழ்நாடு. அவை:—

தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண்பூழி
பன்றி அருவா அதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.

[புனனாடு — சோழநாடு. தென்பாண்டி—செந்தமிழ்ப் பாண்டிநாட் டிற்குத் தென்றிசையிலுள்ளது.]

| | | | |
|---|---|---|---|
| தென்பாண்டியில் | — ஆ — எருமை | — பெற்றம் | என்று வழங்கும் |
| | — சோறு | — சொன்றி | ,, |
| குட்டநாட்டில் | — தாய் | — தள்ளை | ,, |
| | நாய் | ஞெள்ளை | |
| குடநாட்டில் | — தந்தை | — அச்சன் | ,, |
| கற்கா | — வஞ்சர் | — கையர் | ,, |
| வேணாட்டில் | — தோட்டம் | — கிழார் | ,, |
| பூழி | — சிறுகுளம் | — பாழி | ,, |
| | நாய் | ஞமலி | |
| அருவா | — செய் | — செறு | ,, |
| | சிறுகுளம் | — கேணி | ,, |
| அருவாவடதலையில் | — புளி | — எகின் | ,, |
| | குறுணி | — குட்டை | ,, |
| சீதநாட்டில் | — எடா | — எலுவன் | ,, |
| | தோழி | — இகுளை | |
| | தம்மாமி | — தந்துவை | ,, |

தமிழ் நிலத்தைச்சூழ்ந்த பதினேழ் நிலம்:—

சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக்குடகம்
கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம்
கங்கம் மகதம் கடாரம் கவுடம் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதினேழ்புவி தாமிவையே.

அந்தோ என்பது சிங்களம். எருத்தைப்பாண்டில் என்பதும் செப்பு என்பதும் தெலுங்கு. மாமரத்தைக் கொக்கு என்பது துளுவம். கரைய—சிக்க—குளிர என்பன கன்னடம் (கருநடம்).

---

## திசைச் சொற்கள்.

### அரபி.

அகாலத் — நியாயஸ்தலம்
அசூர் — Head-quarters
அமல் (அமுல்) — management
அயன் — actual
அலாக் (அலாயிதா) — separately
அஜுமத் — that which is common, பொது.
ஆசாமி — person
இசாரா — குத்தகை
இஜாரா — rent
இஜாராதார் — renter
இரிசால் — remittance
இலாகா — jurisdiction
உசூர் — Head-quarters
கஸ்பா — The head station in a taluq.
கசாலா — distress
கஜானா — treasury
ͻ — treasurer
கவாபு (கவாப்) — roasted meat
கமாம்சு — business
காடிகானா — stable
காஜி — நியாயாதிபதி
காயம் — permanent

அரபி—(தொடர்ச்சி.)

காய்தா — order, உத்தரவு
கிஸ்திபேரீஸ்து — bariz
கைது — imprisonment
கைதி — prisoner
சராப் — a shroff
சிம்டா — மயிர்பிடுங்குங் கருவி
ஜப்தி — seizure
ஜாஸ்தி — increase
ஜில்லா — district
டபேதார் — Duffadar
தர்ஜமா — translation
தாலுகா — Taluk
திவானி — a place of justice
தேவடி — palace
நகதா — நகது — ready money
நகதி — a monied man
நகல் — copy, duplicate
நாஜூக் — neatness
நாமா — a deed or a bond
நிக்கா — marriage or second marriage.
நொக்கு (நிருக்கு) — price fixed
பசலி — Mohammedan official revenue year.

## திசைச் சொற்கள்—(தொடர்ச்சி).

அரபி—(தொடர்ச்சி.)

பசல் ஜாஸ்தி – இரட்டைவரி
பிஸ்மில்லா – by the grace of the all merciful.
பியூன் – Peon
பீகம் – பேகம் – Princess, a lady of rank.
மஸ்நட் – musnud, throne
மாமூல் – custom
முகதா – in presence of
முன்சிப் – (munsiff)
முசாபரி – முசாபர் – travelling
மோல்வி – மௌல்வி – Moulvi, a learned Muhammadan teacher.
ரயத்து – cultivator, (ryot)
லாயக் – fitness
வகாலத் – agency, proxy
வசூல் – collection

பாரசீகம்.

அர்ஜி – petition
ஆப்காரி – revenue from spirituous liquors.
உமேது – waiting
கசாயிக்காரன் – butcher
கடுதாசி – paper
கமான் – (an arch) வளைவு
கம்பி
கம்மி – deficiency, குறைவு
காம்ரா – a room
கார்பார் – management
இஸ்திபந்த் – A written rule showing when the kist becomes due.

பாரசிகம்—(தொடர்ச்சி.)

கில்லேதார் – commandant of a fort.
கைராத் – anything given in charity.
– அநதப்புரம
சர்பரா – provision, providing.
சிபாய் – a soldier
சிபாரிசு – recommendation
சிப்பந்தி – establishment
சிரஸ்ததார் – A native head man in a Collector's cutchery.
சுபேதார்
சுமார் (சிமார்) – average
சோப்தார் – வெள்ளித்தடிக்காரன்
டகாயத் – dacoity
தஸ்தாவேஜ்–documents, vouchers.
தஸ்துாரி–privileges, சுதந்தரம்
பக்கிரி–சந்யாசி
பந்தோபஸ்த்–securing
பேஷ்–best
பேஷ்கஷ்–tribute
பேஷ்கார்– an officer of revenue inferior to tahsildar.
மாஜர்நாமா–a memorial
முன்ஷி–a teacher of language.
மேஜை – a table
ரஸ்தா–road
ரவாணா–a permit to pass goods free of duty.
ராப்தா–thoroughfare
லங்கர்காணா–தர்ம சத்திரம்

## திசைச் சொற்கள்—(தொடர்ச்சி).

### இந்துஸ்தா

அசல் – a very excellent thing; the original.
அஜூர்–Head-quarters
அந்தஸ்த் – order, condition
அபின் – opium
அலுவா – ஓர் பலகாரம்
அம்பாரி – a howda
அர்க்கார்–messenger
அஸ்திரி–a living
ஆஜர் – ஆசர் – readiness
இஸ்திரி–ironing of clothes
உக்கா
உசார் (உஷார்)–Watchfulness
உஜூர்–Head-quarters
கலாயி-lining of copper vessels
கவாத்–drill of soldiers
கார்கானா – establishment, a workshop.
கிச்சிடி
குடாக் – உக்கா
குமஸ்தா – a clerk
கும்மட்டம் – a globe-lantern of paper.
குல்லா – a cap
கொறடா – a horse-whip
கோட்டா – mocking
சபாஸ்
சப்ஜா – The seeds of the குசும்பா tree.
சவாரி – a ride, a drive
சாலக் – finery, daintiness
சால்வை – shawl
சானிகை – an earthen dish
சிராய் – trousers

### இந்துஸ்தானி—(தொடர்ச்சி.)

செக்பந்தி – defining of boundaries.
சோட்டா – a club, a rod,
சௌக்காரி –
ஜமுக்காளம் – a carpet
– a female ear ornament.
ஜவாப் – answer
ஜவான் – a peon
ஜல்தி – swiftness
ஜோத்தி – slippers
ஜோடு – a pair
டப்பால் (தபால்) – the Post
டவாலி –
டாப்பு – a list
டாணா –
டீக்கா –
டீக்கு
தாவல் – proof
தண்டா – trouble
தயார் – readiness
தர்பார் – government, durbar
துபாஷி – an interpreter
துப்பட்டா – a sheet
தொப்பி – hat
தோப்பிரு – a leather bag or bucket.
நபர் – an individual
நபாப்
நிகா (aim)
நிஜார்
பக்கா – greatness
பக்காளி – water carrier
பங்களா –

## திசைச் சொற்கள்—(தொடர்ச்சி).

### இந்துஸ்தானி—(தொடர்ச்சி.)

பங்கா – punkah
பசந்த் – anything pleasing to the eye.
பஞ்சா – palm of the hand
பஞ்சாயத்து
பஸ்தி – a commodious place
பஜாரி – a harlot
பட்டா – a deed of lease
பத்தாய் – distilled liquors
பல்லா – பல்லாய், an earthen vessel.
பாத்தியா – an annual funeral rite.
பாரா – watching, custody
பாவா
புலெளா
பைசல் – adjustment
பைசா–one-twelfthofan anna
மகமல் – velvet
மசாலா – condiments
மாகாணம் – a province
மாகுல் – produce
மோறு – மொகரா – a gold coin
ரஜா – leave
ராஜி – consent, சம்மதம்
ருஜு – proof
ரூபா – a rupee

### போர்ட்டுகேசியம்.

அமார் (a cable)
அலமாரி
கக்குச (privy)
கிராம்பு (cloves)
குசினி (kitchen)
சாவி (key)

### போர்ட்டுகேஸியம்—(தொடர்ச்சி).

ஜன்னல் (window)
பாதிரி (priest)
லேஞ்சு (handkerchief)

### இங்க்லீஷ்.

அண்டிமாண்ட் (on demand)
அப்பீல் (appeal)
ஆக்ட் (act)
ஆஸ்பத்ரி (hospital)
ஆபீஸ் (office)
ஆர்னீஸ் (harness)
இங்கி (ink)
இஞ்சின் (engine)
இஞ்சினீர் (engineer)
உயில் (will)
ஐஸ் (ice)
கலம் (column)
கலெக்ட்டர் (collector)
கவர்னர் (governor)
களர் (collar)
காபி (copy)
காப்டென் (கப்தான் – Captain)
காப்பி – coffee
கார்ட் (card)
கார்ட் (guard)
காலெஜ் (college)
கிரசனுயில் (Kerosene oil)
கிரிமெண்ட் (agreement)
கேஸ் (case)
கேட் (gate)
கோச் (coach)
கோட் (coat)
கோப்பை (cup)
கோர்ட் (Court)
கௌன் (gown)

## திசைச் சொற்கள்—(தொடர்ச்சி).

### இங்க்லீஷ்—(தொடர்ச்சி.)

க்லோப் (globe)
க்ராப் (crop)
க்ரோட்டன் (croton)
ஸப்பு (soap)
ஸம்மன் (summons)
ஸிவில் (civil)
ஸிக் (sick)
ஸீல் (seal)
ஸூப் (soup)
ஸ்டீமர் (steamer)
ஸ்டீல்பேனா (steel pen)
செக் (cheque)
ஷர்ட் (shirt)
ஷாப் (shop)
ஜட்ஜ் – (judge)
ஜெயில் (jail)
டாகட்டர் (doctor)
டிக்ரி (degree)
டீ (தேயிலை) tea
டோல்கேட் (tollgate)
ட்ராம் (tram)
ட்ரெஸ் (dress)
ட்ரெயின் (train)
தொராம் (drachm)
நெம்பர் (number)
நைஸ் (nice)
நோட் (note)
நோட்டீசு (notice)
பொட்லர் (butler)
பம்ப் (pump)
பாக் (pack)
பாங்கி (bank)
பிஞ்சினீர் (pensioner)
பிஞ்சின் (pension)
பிடிஷன் (petition)

### இங்க்லீஷ்—(தொடர்ச்சி.)

பிஸ்கோத் (biscuit)
புருசு (brush)
பென்ஸில் (pencil)
பேனா (pen)
பைஸிகில் (bicycle)
பொக்லீஸ் (buckles)
பொத்தான் (button)
போலீஸ் (police)
ப்ராந்தி (brandy)
ப்ளீடர் (pleader)
மஸ்லின் (muslin)
மல் (mull)
மெம்பா (member)
மோட்டார் (motor)
ரப்பர் (rubber)
ராங்கி (rank)
ரெஜிஸ்டா (register)
ரெயில் (rail)
ரோஜா (rose)
ரோட் (road)
லாயர் (lawyer)
லைஸென்ஸ் (license)
லோகல் பண்ட் (local fund)

### இதரமானவை.

உடுகலான் – Eau de Cologne
சிலுவை – The cross of Christ.
பீங்கான் – porcelain
பீப்பா – a cask
புதினா – an herb
போகணி – ஓர் பாத்திரம்
மேஸ்திரி – a foreman
மேஜோடு – stockings
வாத்து – a goose
லஸ்கார்

வடசொல்.

பொதுவெழுத்தானும் சிறப்பெழுத்தானும்
ஈரெழுத்தானும் இயைவன வடசொல். (274)

குறிப்பு.—பொதுவெழுத்தா லியைந்தன:—அமலம்—கமலம்—மேரு—காரணம்—கரியம். சிறப்பெழுத்தா லியைந்தன:—சுகி—போகி—சுத்தி. ஈரெழுத்தானும் இயைந்தன—அரன்—அரி—கடினம்—சலம்.

The Sanskrit contained in Tamil may be divided into three portions of different dates.

(1) The most recent portion was introduced by the three religious schools,—the school of the Saiva Sidhanta (the Philosophy of the Agamas), the School of Sankara Charya (Advaita), and the School of Sri Vaishnava founded by Ramanuja Charya (Visishtadvaita).–11th to 16th century. The Sanskrit derivatives introduced by these are pure unchanged Sanskrit.

(2) The school of writers by which the largest portion of the Sanskrit derivatives found in Tamil were introduced was that of the Jainas.—6th to 8th century. The Sanskrit derivatives are very considerably altered, so as to accord with Tamil euphonic rules.

(3) Tamil contains many derivatives belonging to the very earliest period of the literary culture of the language, —derivates probably of an earlier date than the introduction of Sanskrit into the other dialects. They appear to have been derived from oral intercourse with the first Brahminical priests, scholars, and astrologers, and probably remained unwritten for a considerable time. They are greatly corrupted.

வடமொழிகள்.

அக்கினி—தீ—நெருப்பு
அங்குலம்—விரல்
அசம்—அஜம்—ஆடு
அசனம்—சோறு
அசுவம்—குதிரை
அஞ்சனம்—கறுப்பு—கருமை—மை

அண்டம்—முட்டை
அதரம்—(கீழ்) உதடு
அத்தி—எலும்பு. (ஹத்தி)—கொல்லை
அந்தகாரம்—இருள்
அபத்தம்—பொய்
அயம்—இரும்பு

## வடமொழிகள் —(தொடர்ச்சி.)

அரசன்—மன்னன்
அஸ்தமனம்—மாலை
அற்புதம்—புதுமை
ஆகாசம்—விண்
ஆகாரம்—உணவு
ஆக்கினை—கட்டளை
ஆசாரம்—ஒழுக்கம்
ஆசை—விருப்பம்
ஆரணியம்—காடு
ஆலசியம்—சோம்பல்
ஆலிங்கனம்—தழுவல்
இதம் (ஹிதம்) நன்மை
இந்தனம்—விறகு
இரத்தம்—செந்நீர்
இருதயம்—இரத்தாசயம்—மனம்
இரசம்—சுவை
உக்கிரம்—கொடுமை
உதயம்—காலை
உதரம்—வயிறு
ஊரு—தொடை
ஒஷதி—மருந்து
ஔஷதம்—மருந்து
கஜம்—யானை
கட்கம்—வாள்
கண்டம்—கழுத்து
கதலி—வாழை
கந்தம்—மணம்
கபாலம்—மண்டை
கரம்—கை
கர்த்தபம்—கழுதை
கர்ணம்—காது
காங்கை—வெப்பம்
கிரகம்—வீடு
கிரி—மலை
கிரீடம்—முடி
கிருதம்—நெய்
கிருபை—அருள்
கிருமி—புழு
குக்குடம்—கோழி
குணம்—இயல்பு
கூர்மம்—ஆமை
கோதண்டம்—வில்
கோபம்—சினம்—வெகுளி
சகித்தல்—பொறுத்தல்
சக்கரம்—ஆழி
சக்தி—வலி
சத்தம்—ஒலி
சத்தியம்—மெய்
சந்திரன்—திங்கள்
சந்தேகம்—ஐயம்
சத்திரம்—குடை
சமுத்திரம்—கடல்
சரணம்—கால்
சரீரம்—உடல்
சருமம்—தோல்
சர்ப்பம்—பாம்பு
சலம் (ஜலம்)—நீர்
சாகை—கிளை
சார்த்தூலம்—புலி
சிசு—குழந்தை
சிந்தூரம்—சிவப்பு
சிரசு—தலை
சிலை—கல்
சீக்கிரம்—விரைவு
சீதளம்—குளிர்ச்சி
சீலம்—ஒழுக்கம்
சீவன்—உயிர்
சுகம்—இன்பம்
சுவர்ணம்—பொன்
சூரியன்—ஞாயிறு
சூலம்—கழு
சேடம் (சேஷம்)—மிச்சம்—எச்சில்

## வடமொழிகள் —(தொடர்ச்சி.)

சேதம்—கேடு—நட்டம்—பிரிவு
சேனபதி—படைத்தலைவன்
சௌக்கியம்—
தடாகம்—வாரி—குளம்
ததி—தயிர்
தந்தம்—பல்
தம்பம் (ஸ்தம்பம்)—தூண்
தாதா—கொடையாளி
தாது—நரம்பு
தாமிரம்—செம்பு
திரவியம்—செல்வம்
தீபம்—விளக்கு
தீரம்—கரை
துக்கம்—துயரம்
துவசம்—கொடி
தூமம்—புகை
தெய்வம்—கடவுள்
தேசம்—நாடு
நகம்—உகிர்
நதி—ஆறு
நவம்—புதுமை
நவநீதம்—வெண்ணெய்
நாசி—மூக்கு
நாபி—கொப்பூழ்
நாயகி—மனைவி
நாரிகேளம்—தேங்காய்
நித்திரை—தூக்கம்
நிந்தை—இகழ்ச்சி
நேத்திரம்—கண்
பருவம்—பொழுது
பர்வதம்—மலை
பலம்—பழம்
பயம்—அச்சம்
பந்து—உறவு
பரிசம்—தொடுதல்—ஊறு
பக்ஷி—பறவை
பாசம்—அன்பு—கயிறு
பாணம்—அம்பு
பார்யாள்—மனைவி
பாலியம்—இளமை
பானம்—குடிப்பது
பிதா—தகப்பன்
பிசாசம்—பேய்
பிரகாசம்—ஒளி
பிரவாகம்—வெள்ளம்
புட்(ஷ்)பம் பூ—மலர்
புத்தி—அறிவு
புத்திரன்—மகன்
பூமி—நிலம்
பூர்வம்—பழமை
போசனம்—உணவு
மகரம்—சுறு
மகிஷம்—எருமை
மசானம்—சுடுகாடு
மச்சம்—மீன்
மது—கள்
மதுரம்—இனிமை
மனம்—உள்ளம்
மரகதம்—பச்சை
மனுஷர்—மக்கள்
மாதா—தாய்
மாதுலன்—மாமன்
மாமிசம்—தசை—ஊன்
மாருதம்—காற்று
மார்ச்சாலம்—பூனை
மிருகம்—விலங்கு
மூஞ்சி—முகம்
மூலம்—வேர்
மூஷிகம்—எலி
மேதை—நிணம்

## வடமொழிகள் —(தொடர்ச்சி.)

யாகம்—வேள்வி
யுத்தம்—போர்
ரதம்—தேர்
ரத்தம்—செந்நீர்
ராகம்—பண்
ரிஷபம்—எருது
ருசி—சுவை
ரோமம்—மயிர்
வஸ்திரம்—ஆடை
வருஷம்—மழை
வர்னம்—நிறம்
வனம்—தோப்பு
வாகனம்—ஊர்தி
வாகு—தோள்
விசாலம்—விரிவு
விஷம்—நஞ்சு
விரதம்—நோன்பு
விருச்சிகம்—தேள்
விரோதம்—பகை
விவாகம்—மணம்
வீதி—தெரு
க்ஷீரம்—பால்
ஸ்நாநம்—குளித்தல்—நீராடல்

# சொல்லுக்கு அநுபந்தம்

## தொல்காப்பியம்.

சொல்லெனப்படுவ பெயரே வினையென்
றாயிரண்டென்ப அறிந்திசி னோரே.

குறிப்பு.—ஆயிரண்டு = ஆ + இரண்டு.

இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப.

குறிப்பு.—அவற்று வழிமருங்கின்—இடைச்சொல்லும் உரிச்சொல் லும் பெயர் வினைகளின்கண் தாம் தோன்றுதற்கு இடமாகிய இடத் தே. தாம் தோன்றுதற்கு இடமாவன அவன் அவள் உண்டான் உண்டாள் துவைத்தல் துவைக்கும் என்றாற்போல்வன. இடமல்லா தன மாம் மான் என்றாற்போல்வனவாகிய பெயரும் உண் தின் என் றாற்போல்வனவாகிய முதனிலைப்பெயர் தானே நிற்பனவும்.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே.

குறிப்பு.—இயற்சொல்—இயல்பாகிய சொல். திரிசொல்—இயற் சொல் திரிந்துவருஞ் சொல். திசைச்சொல்—திசைக்கண் வழங்குஞ்

சொல். வடசொல் — ஆரியச்சொல். செய்யுளீட்டச் சொல் — ஒரு பொருண்மேல் நிகழும் செய்யுளை ஈட்டுதற்கு உரிய சொற்கள். பிற பாடைச் சொற்கள் ஈட்டுதற்கு உரியவன்றிச் சிறுபான்மை வருமாயின. அவை செப்பு குளிரு சிக்கு அந்தோ என்றாற் போல்வன.

அவற்றுள், இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே.

குறிப்பு.—செந்தமிழ் நிலமாவது வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி.

குறிப்பு —இயற்சொல்லைத் திரிக்குங்கால் தம்எழுத்துச் சிறிது நிற்பத் திரிப்பனவும், அவ்வியற்சொற் றம்மையே பிறசொற் கொணர்ந்து முழுவதூஉந் திரிப்பனவும் என இருவகையாம். கிளி மயில் என்பவற்றைக் கிள்ளை மஞ்ஞை எனச் சிறிதுநிற்பத் திரித்தும் அவற்றைத் தத்தை பிணிமுகம் எனப் பிறசொற்கொணர்ந்து முழுவதூஉந் திரித்துங் கூறுதல். மலைக்கு வெற்பு விலங்கல் விண்டு என்பன முழுவதூஉந் திரிந்தன. இவை ஒருபொருள் குறித்த வேறுசொல். உந்தியென்பது யாழ்ப்பத்தலும் கொப்பூழும் தேர்த்தட்டும் கானியாற்றிடையும் உணர்த்துதல் முழுவதூஉந் திரித்தது. இது வேறுபொருள்குறித்த ஒருசொல். அளகென்பது கோழி கூகை மயில் என்னும் மூன்றுசாதியிற் பெண்பாற்கும் பெயராதலின் இதுவும் வேறுபொருள் குறித்ததாம். இவை முழுவதூஉந்திரிந்தன. இவையெல்லாம் பெயர்த்திரிசொல்.

கேட்டவாயாயின்—செப்பீமன்—ஈங்குவந்தீத்தாய் — புகழ்ந்திகுமல்லரோ—என்மனார் — என்றிசினோர்—பெறலருங்குரைத்து என்பனபோல்வன வினைத்திரிசொல். இவை சிறிது நிற்பத் திரிந்தன.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

குறிப்பு —செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலம்—செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டு நிலம் அப்பன்னிரண்டையும் புறஞ்சூழ்ந்த பன்னிரண்டு நிலம்

பன்னிரு நிலமாவன:—பொங்கர்நாடு ஒளிநாடு தென்பாண்டிநாடு குட்டநாடு குடநாடு பன்றிநாடு கற்காநாடு சீதநாடு பூழிநாடு மலையமா

நாடு அருவாநாடு அருவாவடதலை எனத் தென்கீழ்பால் முதலாக வடகீழ்பால் ஈறாக எண்ணுக.

இப்பன்னிரண்டையுஞ்சூழ்ந்த பன்னிரண்டாவன சிங்களமும் பழந்தீவும் கொல்லமும் கூபமும் கொங்கணமும் துளுவும் குடகமும் கருநடமும் கூடமும் வடுகும் தெலுங்கும் கலிங்கமுமாம்

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே.

குறிப்பு.—அவை வாரி—மேரு—குங்குமம்—மணி—மானம்—மீனம்—வீரம்—வேணு—காரணம்—காரியம்—நிமித்தம்—காரகம் என்றாற்போலச் சான்றோர் செய்யுட்கண் வருவன.

இனி ஒழிந்தோர் செய்யுட்கண்வருவன கமலம்—அமலம்—மூலம்—கோபம்—ஞானம்—ஞேயம்—தமாலம்—தாரம்—திலகம்—நாமம்—யானம்—யோனி—உற்பலம் இவைபோல்வன பிறவுமாம்.

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

குறிப்பு—பொதுவெழுத்தான் இயன்றனவேயன்றி வடவெழுத் தான் இயன்ற வடசொல் சிதைந்துவரினும் பொருத்தமுடையன செய்யுளிடத்து நீக்கார்

தந்திரம்—சூத்திரம்—விருத்தி—அருத்தாபத்தி—உத்தி என்றாற்போல் வன நூலுட் சிதைந்துவந்தன.

பங்கயம்—இடபம்—விசயம்—இருடிகள்—மேகம்—பந்தம்—மயானம்—விடம்—துங்கம்—பலம்—பாரம்—சர்ச்சனை—சாதி—சேனை—சித்தி—சாதனம்—அயன்—அரி—அரன்—ஆரம்—அருகம்—சிங்கம்—மோக்கம்—காமம்—பக்கம்—சூலம்—சதம்—போதகம்—போகம்—சுத்தம்—சலம்—மோகம்—யோகம்—வந்தனை—வேலை—சாலை—மாலை—உவமை—வனிதை—புரி—மேதினி—குமரி—நதி—அரங்கம்—இலங்கை—இயக்கன்—உலோபம்—உலோகம்—நிருத்தம்—கீதம்—வாச்சியம்—வச்சிரம்—அருத்தம்—கருமம்—கருப்பம்—காப்பியம்—பருப்பதம் என்றாற்போல்வன பின்னுள்ளோர் செய்யுட்கண் திரிந்து எற்கும் எழுத்துக்களான் மருவிவந்தன.'

இனிச் 'சிதைந்தன வரினும்' எனப் பொதுப்படக் கூறியவதனால், ஆணை—வட்டம்—கட்டம்—கண்ணன் எனப் பாகதமாகச் சிதைந்தனவுங் கொள்க.

## பெயர்ச்சொல்—(Nouns).

பெயர்ச்சொல் (இன்னதென்பது.)

இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவன பெயரே. (275)

குறிப்பு.—இடுகுறி மரபு. இடுகுறி யாக்கம்.
காரணக்குறி மரபு. காரணக்குறி யாக்கம்.
மரபு—தொன்றுதொட்டு வருவன. ஆக்கம்—தொன்றுதொட்டு வருத லின்றி நடுவிலே ஒருவரால் ஆக்கப்பட்டு வருவன.

தொழிலல காலந்தோற்று = வினையாலணையுங் காரணக்குறியொன்றும் காலங்காட்ட, அல்லாதன காலங் காட்டாதனவாகி.

தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்கள்.

தன்மை யானன் யாநாம். முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ.
அல்லன படர்க்கை. எல்லா மெனல்பொது.

பன்னிரண்டு பொதுப்பெயர்.

தான்யா னானீ யொருமை: பன்மைதாம்
யாநா மெலாமெலீர் நீயிர் நீர் நீவிர். (287)

தொழிற்பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் உரிய இடம்.

வினையின் பெயரே படர்க்கை. வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும். (286)

குறிப்பு.—வினையின் பெயர்—தொழிற்பெயர்.

- தன்மை
  - ஒருமை.
  - பன்மை.
- முன்னிலை
  - ஒருமை.
  - பன்மை.
- படர்க்கை
  - உயர்திணை,
    - ஆண்பால்.
    - பெண்பால்.
    - பலர்பால்.
  - அஃறிணை.
    - ஒன்றன்பால்.
    - பலவின்பால்.

படர்க்கைப் பெயர்ச்சொற்கள், பெரும்பான்மையாய், பொருள்—இடம்—காலம்—சினை—குணம்—தொழில் என அறுவகைப்படும். சிறுபான்மை, சுட்டு—வினா—பிற—மற்று என்னும் இடைச்சொற்களின் அடியாகவும் வரும்.

## படர்க்கைப் பெயர்ச் சொற்கள்.

உயர்திணை.

| | ஆண்பாற் பெயர். | பெண்பால். | பலர்பால். |
|---|---|---|---|
| பொருள் | சுற்றம்—தமன்—நமன்—நுமன் | தமள்—நமள்—நுமள் | தமர்—நமர்—நுமர் |
| | எண்—ஒருவன் | ஒருத்தி | இருவர் |
| | குழூஉ—அவையத்தான் | அவையத்தாள்—அவையத்தி | அவையத்தார் |
| | வேறு—பொன்னன்—பொருநன் | பொன்னள்—பொன்னி. | |
| இடம் | குறிஞ்சி—வெற்பன்—பொருப்பன் | குறத்தி | குறவர் |
| | பாலை—மறவன்—எயினன் | மறத்தி—எயிற்றி | மறவர் |
| | முல்லை—இடையன்—ஆயன் | இடைச்சி—ஆய்ச்சி | இடையர்—ஆயர் |
| | மருதம்—ஊரன்—மகிழ்நன் | உழத்தி | உழவர் |
| | நெய்தல்—சேர்ப்பன்—துறைவன் | பரத்தி | பரதர் |
| | தேயம்—சோழியன்—கொங்கன் | சோழிச்சி—மலையாட்டி | சோழியர்—கொங்கர் |
| | ஊர்—கருவூரான்—மதுரையான் | கருவூராள்—கருவூரி | கருவூரர் |
| | வேறு—மண்ணகத்தான்—பாதலத்தான் | மண்ணகத்தாள்—மண்ணகத்தி | மண்ணகத்தார் |
| காலம் | வருடம்—மூவாட்டையான்—பிரபவன் | மூவாட்டையாள் | மூவாட்டையார் |
| | பருவம்—வேனிலான்—காரான் | வேனிலாள் | |
| | மாதம்—தையான்—மாசியான் | தையாள் | |
| | நாண்மீன்—ஆதிரையான்—ஓணத்தான் | ஆதிரையாள் | ஆதிரையார் |
| | வேறு—நெருநலான்—காலையான் | நெருநலாள் | நெருநலார் |

# படர்க்கைப் பெயர்ச் சொற்கள் —(தொடர்ச்சி).

உயர்திணை.

| | ஆண்பாற் பெயர். | பெண்பால். | பலபால. |
|---|---|---|---|
| சினை | உறுப்பு. தோளன்—செங்கண்ணன் | திணிதோளாள்—தடங்கண்ணி | திணிதோளர் |
| | குழைக்காதன்—குறுந்தாளன் | குழைக்காதாள்—குழைக்காதி. | |
| | நெடுங்கையன் | குறுந்தாளாள்—குறுந்தாளி. | |
| குண | அளவு—பெரியன்—சிறியன் | பெரியள் | பெரியர்—சிறியர் |
| | அறிவு—அறிஞன்—புலவன் | புலமையள் | புலவர் . |
| | அணிபு—பொன்னொப்பான்—மணியணியான் | பொன்னொப்பாள் | பொன்னொப்பார் |
| | வடிவு—கூனன்—குறளன் | கூனள்—கூனி | கூனர்—குறளர் |
| | நிறம்—கரியன்—செய்யன் | கரியள் | கரியர் |
| | கதி—மானுடன்—தேவன் | மானுடத்தி | மானுடர் |
| | சாதி—அந்தணன்—வேளாளன் | பார்ப்பினி | அந்தணர்—வேளாளர் |
| | குடி—சேரன்—சோழன்—பாண்டியன் | | சேரர்—சோழர்—பாண்டியர் |
| | சிறப்பு—ஆசிரியன்—படைத்தலைவன் | படைத்தலைவி | படைத்தலைவர் |
| | வேறு—நல்லன்—தீயன | நல்லள் | நல்லார்—தீயார் |
| தொழில் | வினை—ஓதுவான்—ஈவான் | ஓதுவாள்—ஈவாள் | ஓதுவார்—ஈவார் |
| | வேறு—கணக்கன்—தச்சன் | தச்சிச்சி | கணக்கர்—தச்சர் |
| | சுட்டு—அவன், இவன் | அவள் | அவர் |
| | வினா—எவன்—யாவன்—ஏவன் | எவள்—யாவள் | எவர்—யாவர்—ஏவர் |
| | பிற—பிறன் | பிறள் | பிறர் |
| | மற்று—மற்றையான் | மற்றையாள் | மற்றையார் |
| | நம்பி—ஆடூஉ—விடலை—கோ—வேந்—குரிசில் தோன்றல் | தோழி—செவிலி—மகடூஉ நங்கை—மடந்தை | |

## படர்க்கைப் பெயர்ச் சொற்கள் —(தொடர்ச்சி).

உயர்திணை.

| ஆண்பாற் பெயர். | பெண்பால். | பலர்பால். |
|---|---|---|
| வில்லி – வாளி – கிள்ளி – சென்னி – ஏந்தல் – செம்மல் – ஏறுழி – காவிதி – குடுமி – அண்ணல் | பேதை – பெதும்பை – இருளி | மாந்தர் – மக்கள் |
| | மடந்தை – மாது – பாங்கி | மகார் – சிறார் |
| | பெண்டு – பெண்டாட்டி | வேளிர். |

அஃறிணை

| | ஒன்றன்பால் | பலவின்பால். |
|---|---|---|
| வினா | எது – ஏது – யாது | எவை – ஏவை – யாவை |
| சுட்டு | அது – இது – உது | அவை – இவை – உவை |
| பொருளாதி | குழையது – நிலத்தது – மூலத்தது – கேட்டது – குறிபது – ஆடலது. | |
| சுட்டின் ஆய்தம் | அஃது – இஃது – உஃது | அவ் – இவ் – உவ் |
| எண்ணுகு பெயர் | ஒன்று | இரண்டு – மூன்று – பத்து – நூறு |
| | | பல – சில |
| பிற – பிறிது | | பிற |
| மற்று – மற்றையது | | மற்றைய |

விகுதி பெறாது உயர்திணை அஃறிணைகளில் ஆண்பால் பெண்பால்களை உணர்த்திவரும் பெயர்கள். ஆமேஉ—மகமேஉ—களிறு—பிடி—கடுவன்—மந்தி முதலியன.

இருதிணைப் பொதுப்பெயர் (விரவுப்பெயர்) — தந்தை—தாய், ஆண்—பெண், செவியிலி—செவிபிலிகள். தான்—தாம் என வருவன.

### அஃறிணை இருபாற் பொதுப்பெயர்.

பால்பகா வஃறிணைப் பெயர்கள் பாற்பொதுமைய (281)

குறிப்பு.—பால்பகா வஃறிணைப்பெயர்—ஒன்றன்பால் பலவின்பால் விகுதி பெறாதவரும் அஃறிணைப்பெயர். யானை—மரம். முதலியன.

# அநுபந்தம்

## தொல்காப்பியம்.

பெயர்.

பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ வுருபின் தோன்றலாறே.
பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை யொட்டும் ஒன்றலங் கடையே.

சொற்களுணர்த்தும் திணை.

உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.

குறிப்பு.—மக்கட்சுட்டு—மக்களாகிய நன்குமதிக்கப்படும் பொருள் ஆயிரு—அ + இரு.

உயர்திணைப்பாலின் பாகுபாடு.

ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.

குறிப்பு.—அறிசொல்—அறிதற்குக் கருவியாகிய சொல்.

அஃறிணைப்பாலின் பாகுபாடு.

ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே.

குறிப்பு.—ஆயிருபாற்சொல்—அவ்விரண்டு கூற்றுச் சொல்.

ஆடூஉ வறிசொல்.

னஃகா னொற்றே ஆடூஉ வறிசொல்.

குறிப்பு.—னஃகானொற்று—னஃகானாகிய ஒற்றினை ஈறாகவுடைய சொல்.

மகடூஉவறிசொல்.

ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்

பலரறி சொல்.

ரஃகா னொற்றும் பகா விறுதியும்
மாரைக்கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

குறிப்பு.—மாரைக்கிளவி–மார் என்னும் இடைச்சொல்லை ஈறாக உடைய சொல்.

ஒன்றறி சொல்.

ஒன்றறி கிளவி தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

பலவறி சொல்.

அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே

உயர்திணைப் பெயர்.

அவனிவன் உவனென வரூஉம் பெயரும்
அவளிவள் உவளென வரூஉம் பெயரும்
அவரிவர் உவரென வரூஉம் பெயரும்
யான்யாம் நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றொ டப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே.

குறிப்பு.—பாலறிவந்த–ஒருவன் ஒருத்தி பலர் என்னும் மூன்று பாலினையும் அறியவந்த

ஆண்மை யடுத்த மகனென் கிளவியும்
பெண்மை யடுத்த மகளென் கிளவியும்
பெண்மை யடுத்த இகர விறுதியும்
நம்மூர்ந்து வரூஉம் இகரவை காரமும்
முறைமை சுட்டா மகனு மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு கிளவியும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டென் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன.

குறிப்பு.—பெண்மையடுத்த இகரவிறுதி—பெண்டாட்டியென்னும் சொல். நம்மூர்ந்து வரூஉம் இகர ஐகாரம்—நம்பி நங்கையென்னும் சொல். சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்—அன்னன் அனையன் அன்னன் அனையான். அவை முதலாகிய—அச் சுட்டெழுத்தை முத லாகவுடைய. ஒப்பொடுவரூஉங் கிளவி—ஒப்புமைப் பொருள் பற்றி வரும் பொன்னன்னன் பொன்னன்னள் பொன்னன்னர்.

எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
அன்ன வியல என்மனார் புலவர்

குறிப்பு.—எல்லாரும் – படர்க்கைப் பெயர்ச்சொல். எல்லீரும்—முன்னிலைப் பெயர்ச்சொல்

நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றிவ ரென்னும் எண்ணியற் பெயரோ
டன்றி யனைத்தும் அவற்றியல் பினவே.

குறிப்பு—நிலப்பெயர் – அருவாளன்—சோழியன
குடிப்பெயர் – சேரமான்—மலையமான்—பார்ப்பார்—அரசர்—வணிகர்—வேளாளர்.
குழுவின்பெயர் – அவையத்தார்—அத்திகோசத்தார்—வணிககிராமத்தார்—மாகத்தார்.
வினைப்பெயர் – வருவார்—செல்வார்—தச்சர்—கொல்லர்—தட்டார்—வண்ணார்.
உடைப்பெயர் – அம்பர்கிழான் – பேரூர் கிழான்—குட்டுவன்—பூழியன்-வில்லவன்-வெற்பன்—சேர்ப்பன்.
பண்புகொள்பெயர் – கரியான்—செய்யான்

பல்லோர்க்குறித்த முறைநிலைப்பெயர் – தந்தையர்—தாயர்.
பல்லோர்க்குறித்த சினைநிலைப்பெயர் – பெருங்காலர்—அலைகாதர்.
பல்லோர்க்குறித்த திணைநிலைப்பெயர் – குறவர்—இறவுளர்—வேட்டுவர்—ஆயர்—பொதுவர்—நுளையர்—திமிலர்—பரதவர்—களமர்—உழவர்—எயினர்—மறவர்.

கூடிவரு....பெயர் — பட்டிபுத்திரர்—கங்கைமாத்திரர்.
எண்ணியற் பெயர் — ஒருவர்—இருவர்—முப்பத்துமூவர்.
மகடூஉப்பெயர்கள்—அருவாட்டி—சோழிச்சி—மலையாட்டிச்சி — பாராப்பனி—அரசி—வாணிச்சி—வெள்ளாட்டிச்சி—கொல்லிச்சி — தட்டாத்தி—வண்ணாத்தி - அம்பருடைச்சி—பேரூர் கிழத்தி—எனவரும்

[மகடூஉப் பெயர்கள் டகரவொற்றிரட்டியும் இச்சுப்பெற்றும் தகரவொற்றிரட்டியும் இரண்டு இடைநிலை யெழுத்துக்களைப் பெற்றும் பெறாதும் வரும்.]

அஃறிணைப் பெயர்.

அதுவிது உதுவென வரூஉம் பெயரும்
அவை முதலாகிய ஆய்தப் பெயரும்
அவையிவை உவையென வரூஉம் பெயரும்
அவை முதலாகிய வகரப் பெயரும்
யாதுயா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றோ டப்பதினைந்தும்
பாலறிவந்த அஃறிணைப் பெயரே.

குறிப்பு.—அவை முதலாகிய வகரப்பெயர்—அவ் இவ் உவ்.

பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள வில்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பினாகிய பெயர்நிலை யுளப்பட
அப்பா லொன்பதும் அவற்றோ ரன்ன

குறிப்பு.—வினைப்பெயர்க்கிளவி—வருவது வருவன. ஒப்பினாகிய பெயர் நிலை—பொன்னன்னது பொன்னன்ன.

விரவுப் பெயர்.

இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமையின்
திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்த மரபின்
வினையோடல்லது பால் தெரிபிலவே.

விரவுப்பெயர்க்குப் பெயர் முதலியன.

இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே

எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய வல்ல பிறவு மாஅங்
கன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே.

குறிப்பு.—அன்னபிறவாவன:—மக குழவி போல்வனவும், காடன் காடி ஊடன் ஊடி தரையன் திரையன் மலையன் போலவன்வும், முதியான் எனப் பிராயம்பற்றி வருவனவும், சுமையன் எனத் தொழில் பற்றி வருவனவும் பிறவுமாம்.

**தாம்.**

தாமென் கிளவி பன்மைக் குரித்தே.

**தான்.**

தானென் கிளவி ஒருமைக் குரித்தே.

**எல்லாம்.**

எல்லா மென்னும் பெயர் நிலைக்கிளவி
பல்வழி நுதலிய நிலைத் தாகும்மே.
தன்னு ளுறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை.

குறிப்பு.—தன்னுள் ளுறுத்த பன்மை—தன்மைப் பன்மை.

**நீயிர் நீ.**

நீயிர் நீயென வரூஉங் கிளவி
பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள

**நீ.**

நீயென் கிளவி ஒருமைக் குரித்தே.

**நீயிர்.**

ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே.

**ஒருவர்.**

ஒருவ ரென்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கு முரித்தே தெரியுங் காலை.

## வேற்றுமை.—(Inflection.)

ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கு மீறாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை. (291)

வேற்றுமையாவது பெயர்ப்பொருளை வேறுபடுக்குந் தன்மை. வேறுபடுத்தலாவது செயப்படுபொருள் முதலியன வேறுபடுத்தல். வேற்றுமையென்னும் காரியத்தைச் செய்யும் கருத்தாவாகிய எட்டு வேற்றுமை உருபிற்கும் வேற்றுமையெனப் பெயர் வந்தது காரியவாகு பெயராகிய காரணக்குறி. வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே என்று கொண்டு வேற்றுமையுருபுகள் எட்டேயாம் எனப் பொருள்கொள்வதொன்று.

விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காமல் வேறாகக் கொண்டார். வேற்றுமை ஏழென்பதே அகத்தியர் கொள்கை. எட்டென்றது வடமொழியில் ஐந்திர வியாகரணம்.

### முதல் வேற்றுமை

எழுவா யுருபு திரிபில் பெயரே. (295)
வினைபெயர் விளுக்கொளல் அதன் பயனிலையே.

குறிப்பு —முதல் வேற்றுமை எழுவாய் வேற்றுமை எனவும் வழங்கும். திரிவில்லாமையாவது உருபும் விளியுங் கொள்ளாமல் முடிக்குஞ் சொல்லை நோக்காமல், ஆ—என்றாற்போலத் தன்னிலையில் நிற்பதாம்; பயனிலை என்றது பொருள்நிலை. முதல் வேற்றுமையின் பொருளாவது வினைமுதற்பொருளின் குணமாகத் தன்னைத்தானே வேற்றுமைசெய்தல் என்பதாம். வினை என்றது வினை வினைக்குறிப்பு முதலிய வினைவிகற்பங்களடங்கலும்.

வினை—சாத்தன் வந்தான்—சாத்தன் கரியன்—அவன் வாழ்க.

ஆவுண்டு—அவனுண்டு—அவனில்லை—
சாத்தனுண்டசோறு—சாத்தன் பெரிய மனிதன்

பெயர்—சாத்தனிவன்—பசுவொன்று.
விளு—அவன் யாவன்—அவை யெவை.

இவ்வெழுவாய்க்கு ஐ முதலியனபோன்ற உருபு இல்லையாயினும், சிறுபான்மை ஆனவன் ஆகின்றவன் ஆவான் என்பவன் முதலிய ஐம்பாற் சொற்களும் சொல்லுருபுகளாகவரும். சாத்தனானவன் வந்தான். சாத்தியானவள் வந்தாள் சாத்தரானவர் வந்தார். யானையானது வந்தது. யானையானவை வந்தன.

**இரண்டாம் வேற்றுமை.**

இரண்டா வதனுரு ஐயே. அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதியாகும். (296)

இரண்டாம் வேற்றுமைக்கு உருபாவது ஐ அவ்வுருபிற்குப் பொருளாவது தன்னையேற்ற பெயர்ப்பொருளிலிருக்கிற செயப்படு பொருண்மை அல்லது கருமத்தன்மை செயப்படு பொருண்மையாவது வினைமுதற் றொழிற்பயனுக்கிடமாவது.

கோயிலைக் கட்டினான் என்பதில், கல்லடுக்கல் முதலிய செயல் வினைமுதற் றொழிலாம், அத்தொழிலால் கோயிலுண்டாகுகை பயனும். அப்பயனுக்கிடம் கோயில் ஆதலால் கோயில் செயப்படு பொருளாம்

ஆக்கல் — குடத்தை வனைந்தான்
அழித்தல் — குடத்தை உடைத்தான்
அடைதல் — குடத்தை யடைந்தான்
நீத்தல் — குடத்தைத் துறந்தான்
ஒத்தல் — குடத்தை யொத்தான்
உடைமை — குடத்தை யுடையான்

இவ் வேற்றுமை தன் பெயர்ப்பொருளை மேலே சொல்லிய எழுவாய்க்கண் வருங் கருத்தனால் ஆகிய காரியமாக்குதலால் இரண்டாம் வேற்றுமை என்னப்பட்டது.

**மூன்றாம் வேற்றுமை.**

மூன்று வதனுரு பாலா னோடொடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள் (297)

ஆல்—ஆன் இரண்டும், கருவிப்பொருளிலும், கருத்தாப்பொருளிலும்; ஒடு—ஓடு இரண்டும் உடனிகழ்ச்சிப்பொருளிலும் வரும்

கருவியாவது வினைமுதற் றொழிற்பயனைச் செயப்படுபொருளிற் சேர்ப்பது; கர்த்தாவாவது ஒருதொழிலி னிகழ்ச்சியிலே தன்வயத்ததாகக் குறிக்கப்படுபொருள்; உடனிகழ்ச்சியாவது வினைகொண்டு முடியும் பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடைய பொருள்

| கருவி | கருத்தா | உடனிகழ்ச்சி |
|---|---|---|
| வாளால் வெட்டினான். | அரசனாலாகிய கோயில் | ஆசிரியனொடு மாணாக்[கன் வந்தான். |
| வாளான் வெட்டினான். | அரசனானாகிய கோயில். | ஆசிரியனோடு மாணாக்[கன் வந்தான். |

ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளிலும், ஒடு ஓடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருளிலும், ஒரோவிடத்து அருகி வரும். "தூங்குகையா னோங்குநடைய"; "உறழ்மணியா னுயர்மருப்பின" என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. தூங்குகையோடு உறழ்மணியோடு என்பது பொருள்

"கொடியொடு துவக்குண்டான்"; "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்பனவற்றில், கொடியொடு ஊசியொடு என்பன கொடியால் ஊசியால் எனப் பொருள்படுகின்றன

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள் தோறும் என்னும் பொருளில் வரும். "ஊரானோர் தேவகுலம்"

ஆல் ஆன் நிற்றற்குரியவிடத்துக் கொண்டென்பதும், ஒடு ஓடு உருபுகள் நிற்றற்குரியவிடத்து உடனென்பதும் சொல்லுருபுகளாக வரும். வாள்கொண்டு வெட்டினான் தந்தையுடன் மைந்தன் வந்தான்.

இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய காரியத்து வேண்டுங் கருவிப்பொருளைத் தருதலால், இது மூன்றும் வேற்றுமை எனப் பட்டது

தான்காம் வேற்றுமை.

நான்கா வதற்குரு பாகுங் குவ்வே.
கொடை பகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியின் இதற்கிதெனல் பொருளே.(298)

இதற்கிதெனல் பொருள் = இதற்கு இது என்பதுபட வருதற்கு உரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னை யேற்றபெயர்ப்பொருளை வேற்றுமைசெய்வது இதன்பொருள்.

[நேர்ச்சி—நட்பு. தகவு—தகுதி]

கொடை — இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்.
அதுவாதல் — ஆடைக்கு நூல்
பகை — பிணிக்கு மருந்து
பொருட்டு — கூலிக்கு வேலை
நட்பு — விளக்கிற் கெண்ணெய்
தகுதி — தவத்துக்குப் பொறை
முறை — சாத்தற்கு மகன்

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே பொருட்டு நிமித்தம் என்பனவும், குவ்வுருபின்மேல் ஆக என்பதும் சொல்லுருபுகளாக வரும்.

ஒருவன் ஒரு காரியத்தை ஒரு கருவியாற் செய்தல் தனக்காயினும் பிறர்க்காயினும் உதவுதற்பொருட்டாதலால் அம்முறைபற்றி இது நான்காம் வேற்றுமை எனப்பட்டது.

ஐந்தாம் வேற்றுமை.

ஐந்தா வதனுரு பில்லும் இன்னும்.
நீங்கலொப் பெல்லை ஏதுப் பொருளே. (299)

நீங்கல் — மலையி னீங்கினன்.
ஒப்பு — பாலின் வெளிது கொக்கு.
எல்லை — மதுரையின் வடக்குச் சிதம்பரம்.
ஏது — கல்வியிற் பெரியன் கம்பன்

நீக்கப்பொருளிலும் எல்லைப்பொருளிலும், இன் இல் உருபுகளின் மேல், நின்று இருந்து என்பவை, உம் பெற்றும் பெறாதும் சொல் லுருபுகளாக வரும்

இந்த வேற்றுமையுருபு 'இதனின் இற்று இது' என விகற்பித் தறி வதற்கு வருவது இவ்வாறு விகற்பித்து உணர்ந்தாலல்லது கொடுத் தல் கூடாததினால் இது ஐந்தாம் வேற்றுமை எனப்பட்டது.

ஆறாம் வேற்றுமை.

ஆற னொருமைக் கதுவும் ஆதுவும்,
பன்மைக் கவ்வும உருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்கம் ஆந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே (300)

குறிப்பு.—தற்கிழமைப் பொருளாவது தன்னோ டொற்றுமை யுடைய பொருளின் சம்பந்தம் பிறிதின் கிழமைப் பொருளாவது தன்னின் வேறாய பொருளின் சம்பந்தம்.

தற்கிழமை

பண்புத்தற்கிழமை — நிலத்த தகலம்
உறுப்புத்தற்கிழமை — புலியது வால்
ஒன்றன்கூட்டத் (ஒருபொருளின் கூட்டத்) தற்கிழமை— எள்ளது குப்பை
பலவினீட்டத் (பலபொருளின் கூட்டத்) தற்கிழமை — படையது தொகை
திரிபினாக்க (ஒன்றுதிரிந்தொன்றானது)த் தற்கிழமை—எள் ளது சாந்து
ஆது—எனாது கை, நினது தலை, தனது புஜம்
அ —என கைகள், தன தாள்கள்

பிறிதின்கிழமை.

பொருட்பிறிதின்கிழமை — முருகனது வேல்
இடப்பிறிதின்கிழமை — சாத்தனது வீடு
காலப்பிறிதின்கிழமை — சாத்தனது நாள்

இவ்வுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாகவரும்

மேற்சொல்லிய கொள்வோனையும் கொடைப்பொருளையும் 'இதனின் ஆற்று இது' என விகற்பித்துணர்ந்து கொடுத்தல், இந்த இருகிழமைப் பொருளுடையார் செயல் என்பது தோன்ற, இது ஆறாம் வேற்றுமை எனப்பட்டது

**ஏழாம் வேற்றுமை.**

ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறும் ஓரிரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொரு ளென்ப (301)

பொருள் முதலாறும்....இதன்பொருள் = தம்மை ஏற்ற பெயர்ப் பொருளாகிய பொருளாதியாறும் மேற்சொல்லிய இருகிழமைப்பொருட்கும் இடமாகி நிற்க வேற்றுமைசெய்தல்.

| | | |
|---|---|---|
| பொருளிடமாதல் | தற் | — மணியின்கண் ஒளி |
| | பிறி | — பனையின்கண் அன்றில் |
| இடமாதல் | தற | — ஊரின்கண் இல்லம் |
| | பிறி | — ஆகாயத்தின்கண் பருந்து |
| காலமிடமாதல் | தற் | — நாளின்கண் நாழிகை |
| | பிறி | — வேனிற்கண் பாதிரி |
| சினையிடமாதல் | தற் | — கையின்கண் விரல் |
| | பிறி | — கையின்கண் கடகம் |
| குணமிடமாதல் | தற் | — கறுப்பின்கண் அழகு |
| | பிறி | — இளமைக்கண் செல்வம் |
| தொழிலிடமாதல் | தற் | — ஆடற்கண் சதி |
| | பிறி | — ஆடற்கண் பாட்டு |

இந்த உருபு பெயர்ப்பொருளை மேற்சொல்லிய இருகிழமைப் பொருள்களுக்கும் இடமாக வேற்றுமைசெய்தலால் ஏழாம் வேற்றுமை எனப்பட்டது.

**ஏழாம் வேற்றுமை உருபுகள்.**

கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலம்இடம் மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதேம் உழைவழி உழிஉளி
உள்அகம் புறம்இல் இடப்பொரு ளுருபே.

**எட்டாம் வேற்றுமை.**

எட்ட னுருபே எய்துபெய ரீற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பயற்
றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே. (303)

அயற்றிரிபு—ஈற்றயல் திரிதல்
ஈறுதிரிபு—அன்னை—அன்னாய்—அன்னா—அன்னே. குழையாள்—குழையாய். வாயிலான்—வாயிலாய்.

ஈறுகுன்றல்—புலவன்—புலவ: மன்னன்—மன்ன. எல்லாள்—எல்லா
ஈறுமிகுதல்—முனி—முனியே: கடலார்—கடலாரே.
ஈறுஇயல்பு—வேந்து கூறாய்.
ஈற்றயல்திரிபு—மக்கள்—மக்காள். அடிகள்—அடிகேள். தெவ்வர்—தெவ்விர். நாய்கர்—நாய்கீர். சான்றார்—சான்றீர்—தோன்றல்—தோன்றால்.

இன்னும் வேறுவிதமாகவும் வரும்.

அளபெடுத்தல்—வேள்—வேஎள். சிறார்—சிறாஅர். சேய்—சேஎய். மால்—மாஅல்.

ஈறும் ஈற்றயலும் திரிந்து மிகுதல். வாயிலான்—வாயிலோயே.

இது எழுவாயினின்றும் ஒருவிதத்தினாலே வேறுபடுவதால் இறுதியிலே வைத்து எட்டாம் வேற்றுமை எனப்பட்டது.

## அநுபந்தம்.

## தொல்காப்பியம்.

**வேற்றுமை எத்தனை.**

வேற்றுமைதாமே ஏழெனமொழிப
விளிகொள்வதன்கண் விளியோ டெட்டே.

குறிப்பு.—விளிகொள்வது என்றது விளிகொள்ளும் பெயரை. அதன்கண்விளி என்றதனால், பெயருமன்று, பெயரின் வேறுமன்று. விளிவேற்றுமையாவது திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயரிறுதி.

**வேற்றுமைகளின் பெயர்.**

பெயர் ஐ ஒடுகு
இன் அது கண்விளி என்னும் ஈற்ற.

**உருபுநிற்கும் இடம்.**

கூறிய முறையின் உருபுநிலை திரியா(து)
ஈறுபெயர்க் காகும் இயற்கைய வென்ப.

குறிப்பு.—பெயர்க்கு ஈறாகும் இயற்கைய எனக் கூட்டிக் கொள்வது.

**எழுவாய் (முதல்) வேற்றுமை.**

அவற்றுள்
எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே.

**பயனிலை.**

பொருண்மை சுட்டல், வியங்கொள வருதல்,
வினைநிலை யுரைத்தல், வினாவிற் கேற்றல்,
பண்புகொள வருதல், பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.

குறிப்பு.—அகரச்சுட்டு அன்றியென ஈறுதிரிந்து நின்றது.

**எழுவாய் தோன்றியும் தோன்றாமலும் நிற்றல்.**

எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.

குறிப்பு.—எவ்வயிற் பெயரும் என்பது தன்மை முன்னிலை படர்க்கையாகிய மூன்றிடத்து எழுவாயும். அவ்வியல் நிற்றல்—மேற்குறிய வாறு பயனிலை கோடல்.

தோன்றாது பயனிலை கொள்வது தோன்றாவெழுவாய் என வழங்கும்.

"The order in which case formations have been arranged by Dravidian grammarians is the same as that of the Sanskrit. The imitation of Sanskrit in this particular was certainly an error; for whilst in Sanskrit there are eight cases only, the number of cases in Tamil, Telugu, etc., is almost indefinite. Every post-position annexed to a noun constitutes, properly speaking, a new case; and therefore the number of such cases depends upon the requirements of the speaker and the different shades of meaning he wishes to express. In particular, the 'inflection' or inflected form of the base, or oblique case, as it is sometimes called, which has sometimes a possessive, sometimes a locative, and sometimes an adjectival signification, ought to have had a place of its own. Notwithstanding this, the usage of Dravidian grammarians has restricted the number of cases to eight. Tamil grammarians, in following the order of the Sanskrit cases, have also adapted or imitated the Sanskrit mode of denominating them—not by descriptive appellations, as dative or ablative, but by numbers. Though a nominative, or first case, stands at the head of the Dravidian list of cases, the only cases, properly so called which are used by these languages, are the oblique cases."—CALDWELL.

---

## வினைச்சொல்.—(Verbs).

வினைச்சொல் (இன்னதென்பது).

> வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும். (தொல்).

தெரிநிலை வினைச்சொல் (இன்னதென்பது).

> செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
> செய்பொருள் ஆறும் தருவது வினையே. (320)

குறிப்பு.—முற்றும்மை ஒரோவழி எச்சமுமாகும் ஆகையால் ஆறும் என்கிற தொகையில் சில குறைந்து வருவதும் கொள்ளப்படும்—கொடியாடிற்று என்பதில் செயப்படுபொருள் குறைந்துவந்தது.

குறிப்பு வினைச்சொல் (இன்னதென்பது).

> பொருண்முதல் ஆறினுந் தோற்றிமுன் னாறனுள்
> வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே. (321)

வினைச்சொற்களின் வகை.

> அவைதாம்,—
> முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி
> ஒன்றற் குரியவும் பொதுவும் ஆகும். (322)

முக்காலம்.

> இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே (382)

குறிப்பு —இறப்பு—தொழிலது கழிவு. நிகழ்வு—தொழில் தொடங்கி முற்றுப் பெறாமல் நடக்கின்ற நிலைமை எதிர்வு—தொழில் பிறவாமை.

"முக்காலத்தும் வருதற்குரிய காலங்காட்டும் எழுத்துக்களைத் தொல்காப்பியர் எடுத்து ஓதாராயினர், பின்னுள்ளோர் காலங்கட்கு உரியவாக எடுத்தோதிய எழுத்துக்கள் தம்முள் மயங்கியும் வருதலின்" (நச்சினார்க்கினியர்)

இறந்தகால விடைநிலை.

> தடறவொற் றின்னே ஐம்பால் மூவிடத்
> திறந்த காலந் தருதொழி லிடைநிலை. (142)

குறிப்பு.—சிறுபான்மை இன்னிடைநிலை எஞ்சியது எனக் கடைகுறைந்தும் போனது என முதல் குறைந்தும் வரும்.

**நிகழ்கால விடைநிலை.**

ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை. (143)

**எதிர்கால விடைநிலை.**

பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாம்இவை சிலவில. (144)

**காலங்காட்டும் விகுதி.**

றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்,
தவ்வொ டிறப்பும் எதிர்வும், டவ்வொடு
கழிவும், கவ்வோ டெதிர்வும், மின்ஏவல்
வியங்கோள் இம்மார் எதிர்வும், பாந்தம்
செலவொடு வரவும், செய்புநிகழ் பெதிர்வும்,
ஈதிர்மறை மும்மையும், ஏற்கும் ஈங்கே. (145)

குறிப்பு.—று–றும்–சென்று (சென்றேன்), சென்றும் (சென்றேம்).
சேறு (செல்வேன்), சேறும் (செல்வேம்).
து–தும்—வந்து (வந்தேன்), வந்தும் (வந்தேம்)
வருது (வருவேன்), வருதும் (வருவேம்).
டு–டும் —உண்டு (உண்டேன்), உண்டும் (உண்டேம்).
கு–கும்—உண்கு (உண்பேன்), உண்கும் (உண்பேம்).
மின்–ஈர் – உம் – ஆய் — உண்மின், உண்ணீர், உண்ணும்,
உண்ணாய்.
வியங்கோள்—உண்க, வாழிய, வாழியர்.
இ —சேறி (செல்வாய்).
மார் —உண்மார் (உண்பார்).
ப —உண்ப (உண்டார்–உண்பார்).
செய்யும் —உண்ணும் (நிகழ்காலம் எதிர்காலம்).
எதிர்மறை —உண்ணு (முக்காலமுங் காட்டும்).

**வேறு காலங்காட்டுமவை.**

| | |
|---|---|
| குடுறு என்னும் ஈற்றுச் சில குறிவினைப் பகுதிகள் தம்மொற் றிரட்டி இறந்த காலம் காட்டும். | கு–புக்கான்–நக்கான். டு–தொட்டான்–விட்டான். று–உற்றான்–பெற்றான். |
| யகர இடைநிலை இறந்த காலம் காட்டும். | போயது. |
| ஆகிடந்து ஆவிருந்து என்பன நிகழ்காலம் காட்டும். | உண்ணாகிடந்தான. உண்ணா விருந்தான். |

இசின் என்பது செய்யுளில் இறந்தகால இடைநிலையாக வரும். } என்றிசினோர்.

மகரமெய்யும் மன் என்பதும் செய்யுளில் எதிர்கால இடைநிலைகளாக வரும். } என்மார். என்மனார்

முற்றுவினை.

பொதுவியல் பாறையும் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே. (323)

பாற்பொதுவினை.

யாரென் வினுவினைக் குறிப்புயர் முப்பால். (349)

குறிப்பு.—அஃறிணை யிருபாலிலும் மற்றையீரிடத்திலும் வருதல் புதியன புகுதலாம்.

எவனென் வினுவினைக் குறிப்பிழி யிருபால். (350)

குறிப்பு.—இது ஆண்பாலை யுணர்த்தும் எவனன்று. இது என், என்ன, என்னை என விகாரப்பட்டும் வரும்.

முற்றுவினை விகுதி.

தன்மை.— { ஒருமை—கு—டு—து—று—அன்—என்—ஏன்—அல்.
பன்மை—அம்—ஆம்—எம்—ஏம்—ஓம்—கும்—டும்—றும்—தும்.

முன்னிலை.— { ஒருமை—ஐ—ஆய்—இ.
பன்மை—இர்—ஈர்.

படர்க்கை.— { ஆண்பால்—அன்—ஆன்.
பெண்பால்—அள்—ஆள்.
பலர்பால்—அர்—ஆர்—ப—மார்.
ஒன்றன்பால்—து—று—டு.
பலவின்பால்—அ—ஆ (எதிர்மறையில் மாத்திரம்.)

ஏவல்.— { ஒருமை { உடன்பாடு—ஆய்—இ.
எதிர்மறை—அல்—ஆல்—ஏல்.
பன்மை—மின்.

வியங்கோள் —க—ய—ர்—இய—இயர்—அ—அல்—தல்.

தெரிநிலை வினைமுற்று விகற்பம்.

ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்,
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினும்,
மூக்கா லத்தினு மூாண், முறையே
மூவைந் திருமூன் றுருய், முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பாலும். (324)

| | | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. |
|---|---|---|---|---|
| படர்க்கை. | ஆண்பால். | | | |
| | பெண்பால். | | | |
| | பலர்பால். | | | |
| | ஒன்றன்பால். | | | |
| | பலவின்பால். | | | |
| தன்மை. | ஒருமை. | | | |
| | பன்மை. | | | |
| முன்னிலை. | ஒருமை. | | | |
| | பன்மை. | | | |

இருதிணைப் பொதுவினை.

> நன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
> உண்டூ ரெச்சம் இருதிணைப் பொதுவினை. (330)
>
> வேறில்லை உண்டைம்பால் மூவிடத்தன. (339)

பெயரெச்சம்.

> செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
> காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
> செய்வ தாதி அறுபொருட் பெயரும்
> எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே. (340)

குறிப்பு.—பெயரெச்ச விகுதி.—அ—உம். 'தோன்றி' என்பது வரைக்கும் தெரிநிலையுடன்பாட்டிற்கும், ஒழிந்தவிதி தெரிநிலையும் குறிப்புமாகிய உடன்பாட் டெதிர்மறை யிரண்டற்கும் கொள்ளக் கிடக்கின்றது இச்சூத்திரம்.

வினையெச்சம்.

> தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
> ஒழிய நிற்பது வினையெச் சம்மே. (342)

வினையெச்ச வாய்பாடுகளும் விகுதிகளும்.

> செய்து செய்பு செய்யாச் செய்யூச்
> செய்தெனச், செயச், செயின் செய்யிய செய்யியர்

வான்பான் பாக்கின விளையெச் சம்பிற
ஐந்தொன் றுறுமுக் காலமு முறைதரும். (343)

இறந்தகாலம்.—உ—பு—ஆ—ஊ—என (இ—ய்—உம்.)

நிகழ்காலம்.—அ.

எதிர்காலம். — இ ன்—இய—இ பர்—வான்—பான்—பாக்கு (ஆல்—கால்—ஏல்—கடை—வழி—இ—தக.)

எதிர்மறை.—பக்—மை—மே—து—மைக்கு.

குறிப்பு.—அ—றி—து—ஆல்—மல்—கால்—கடை—வழி—இடத்து.

சொற்றிரி யினும்பொருள் திரியா வினைக்குறை (346)

ஞாயிறு பட்டுவந்தான்—பட
மழைபெய்து நெல்விளைந்தது—பெய்ய
யான்சொல்லின் பொன் சொடுத்தான்— கொள.

## தெரிநிலை வினைப் பகுப்பு.

1. செயப்படுபொருள் குன்றியவினை.
செயப்படுபொருள் குன்றாவினை.

2. தன்வினை.
பிறவினை.
பிறவினை விகுதி.—வி—பி—கு—சு—டு—து—பு—று.

3. செய்வினை.
செயப்பாட்டுவினை.
செயப்பாட்டுவினை விகுதி.—படு, உண்.

4. தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவினை. — அழி—கெடு—வெளு—கரை—தேய்—முதலியன.

5. செய்வினைக்கும் செயப்பாட்டுவினைக்கும் பொதுவினை.

6. விதிவினை (உடன்பாடு).
மறைவினை (எதிர்மறை).
எதிர்மறை யிடைநிலை— இல்—அல்—ஆ.

# அநுபந்தம்.

## தொல்காப்பியம்.

### உயர்திணை முற்றுவினை.

**தன்மைப் பன்மை.**

> அம்ஆம் எம்ஏம் என்னுங் கிளவியும்
> உம்மொடு வரூஉம் கடதற வென்னும்
> அந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
> பன்மையுரைக்குந் தன்மைச் சொல்லே

**தன்மை யொருமை.**

> கடதற வென்னும்
> அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோடு
> என்ஏன் அல்லென வரூஉ மேழும்
> தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே.
> அவற்றுள்,
> செய்கென் கிளவி வினையொடு முடியினும்
> அவ்வியல் திரியா தென்மனார் புலவர்.

**படர்க்கை யொருமை முற்று.**

> அன்ஆன் அள்ஆள் என்னு நான்கும்
> ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

**படர்க்கைப் பன்மை முற்று.**

> அர்ஆர் பஎன வரூஉ மூன்றும்
> பல்லோர் மருங்கின் படர்க்கைச் சொல்லே.
> மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
> காலக் கிளவியொடு முடியு மென்ப.

**குறிப்பு.**—*காலக்கிளவி—வினை.*

**யார்.**

> யாஅர் என்னும் வினாவின் கிளவி
> அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே.

**உயர்திணை வினைக்குறிப்பு.**

அதுச்சொல் வேற்றுமை யுடைமையானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தினானும்
ஒப்பினானும் பண்பினானுமென்
றப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்.

அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம்.

**அஃறிணைத் தெரிநிலைவினை.**

அஆ வஎன வரூஉ மிறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை.

ஒன்றன் படர்க்கை தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

**எவன்.**

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்குமென்ப எவனென் வினாவே.

**அஃறிணை வினைக்குறிப்பு.**

இன்றில உடைய என்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல என்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பினாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும்.

**முன்னிலை யொருமைவினை.**

முன்னிலைக் கிளவி
இஐ ஆய்என வரூஉ மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவற்கும் ஒன்றற்கும்.

**முன்னிலைப் பன்மை.**

இர்ஈர் மின்என வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்.

விரவுவினை.

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
பிரிபுவேறு படூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்கு மோரன்ன வுரிமைய.

அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீரிடத் தொடு
மன்னுதாகும் வியங்கோட் கிளவி.

வினையெச்சம்.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின் செயச் செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி.
பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்
அன்ன மரபின் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே.

பெயரெச்சம்.

நிலமும் பொருளும் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன வுரிமைய
செய்யும் செய்த என்னுஞ் சொல்லே.
பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா..

## இடைச்சொல்.—(Particles).

இடைச்சொல் (இன்னதென்பது).

வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியின் தனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஓரிடத்
தொன்றும் பலவுமவந் தொன்றுவ திடைச்சொல் (420)

குறிப்பு—பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல் எனப்பட்டன தனித்து நடக்கும் ஆற்றலில்லனவாய்ப் பெயர்வினைகளிடமாக நடத்தலின் இடைசொல் எனப்பட்டன எனினும் அமையும் "முன்னும் பின்னும் நிற்குமேனும் பெரும்பான்மையும் இடையே நிற்றலின் இடைச்சொல் என்றார்" என்பர் நச்சினார்க்கினியர். இசைநிறை—வேறுபொருள் உணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது. அசைநிலை—வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லோடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது (அசைத்தல்—சார்த்துதல்).

சாரியை யுருபிடைச்சொற்கள்.

அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்
தமநம் நும்ம அம்ஐ குன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே. (244)

குறிப்பு.—

| | | |
|---|---|---|
| அன்—அதன்கால் | இற்று—பதிற்றுப்பத்து | நும்—எல்லீர் நும்மையும் |
| ஆன்—ஒருபாற்கு | அத்து—மரத்துக்கோடு | ஏ—ஒன்றேகால் |
| இன்—வண்டின்கால் | அம்—மன்றம் | அ—தமிழப்பிள்ளை |
| அல்—தொடையல் | தம்—எல்லார் தம்மையும் | உ—அவனுக்கு |
| அற்று—பலவற்றை | நம்—எல்லா நம்மையும் | ஐ—இரட்டைப் பிள்ளை |
| | கு—உய்குவான் | ன—ஆன் |

இன்னபிறவும் என்றதனால், தன்—அவன்றனை: தான்—அவன்றான்: தாம்—அவர்தாம்: ஆம்—புற்றாஞ்சோறு: ஆ—இல்லாப்பொருள்: து—செய்துகொண்டான் என்றாற் போன்றனவும் வரும்.

உவமவு நபிடைச்சொற்கள்.

போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத் துருபே. (367)

தத்தம் பொருள் இடைச்சொற்கள்.

ஏ.

பிரிநிலை வினாவெண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே. (422)

பிரிநிலை —அவருள் இவனே கள்வன்.
வினா —நீயே கொண்டாய்?
எண் —நிலனே நீரே தீயே வளியே.
ஈற்றசை —என்று மேத்தித் தொழுவோம் யாமே.
தேற்றம் —உண்டே மறுமை.
இசைநிறை—ஏயே இவளொருத்தி பேயோ.

அவனே கொண்டான் என்பது அவன் கொண்டிலன் என எதிர் மறைப்பொருள் பட நிற்றலுமுண்டு.

ஓ.

ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே. (423)

ஒழியிசை—படிக்கவோவந்தாய் (என்பது படித்தற்கன்று விளையாடு தற்கு வந்தாய்).

வினா—அவனோ செய்தான்.

சிறப்பு—உயர்வு சிறப்பு—ஓஒ பெரியன். இழிவு சிறப்பு—ஓஒ கொடியன்.

எதிர்மறை—நானோ செய்தேன் (—நான் செய்திலேன்).

தெரிநிலை—(ஒருவனைத் தூரத்திற் கண்டு) சாத்தனோ அல்லன் கொற்றனோ அல்லன்.

கழிவு (—கழிவிரக்கம்)—ஓஒ என்ன உணர்விலையோ.

அசைநிலை—கட்டுரைப்ப தென்கொலோ.

பிரிநிலை—அவனோ சொன்னான்.

என.

வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்
எனவெனு மொழிவரும். என்றும் அற்றே. (424)

வினை —மைந்தன் பிறந்தானெனத் தந்தை உவந்தான்.
பெயர் —ஊரெனப்படுவது உறையூர்.
குறிப்பு —பொள்ளென வாங்கே புறம் வேரார்.
இசை —ஒல்லென ஒலித்தது.
எண் —நிலமென நீரென நெருப்பென காற்றென ஆகாய மெனப் பூதம் ஐந்து.
பண்பு —வெள்ளென விளர்த்தது.

உம்.

எதிர்மறை சிறப்பையம் எச்சமுற் றளவை
தெரிநிலை ஆக்கமோ டும்மை யெட்டே (425)

எதிர்மறை—செய்தலுங் கூடும்
சிறப்பு —உயர்வு—குறவருமருளுங் குன்றம்
இழிவு—மீனும் காறினர் வேறினி வேண்டுமோ
ஐயம் —பத்தாயினும் எட்டாயினும் கொடு
எச்சம் —இறந்தது தழுவியது—கொற்றனும் வந்தான் (முன்னே சாத்தன் வந்தான்)
எதிரது தழுவியது (இனிச்சாத்தனும் வருவான்)
முற்று —ஐம்புலனும் அறிவுக்கிடம்
எண் —இரவும் பகலும்
தெரிநிலை —நானும் அல்லன் நீயும் அல்லை
ஆக்கம் —பாலுமாயிற்று (அதுவே மருந்துமாயிற்று).

மன்.

மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும். (432)

அசைநிலை—அதுமன் கொண்கன் தேரே
ஒழியிசை —கூரிய தோர் வாள்மன் (இரும்பை வெட்டியது)
ஆக்கம் —நெடியன்மன் (அவனே வலியனுமானான்)
கழிவு —அமுதம் பெறின் எமக்கீயு மன்னே (அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்தது
மிகுதி —எந்தை எமக்கருளுமன்
நிலைபேறு—மன்னுவுலகத்து மன்னியது புரிமோ.

மற்று.

வினைமாற் றசைநிலை பிறிதெனும் மற்றே. (433)

வினைமாற்று—மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் (பின்னால் விரையாது அறிவாம்)
அசைநிலை —மற்றென்னை ஆள்க
பிறிது —மற்றென் செய்யார்

கோல்.

*கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.* (435)

ஐயம் —குற்றிகொல் மகன் கொல்
அசைநிலை—கற்றதனுலாய பயனென்கொல்.

அந்தில், ஆங்கு.

*அந்திலாங் கசைநிலை இடப்பொரு ளவ்வே.* (437)

அம்ம.

*அம்ம உரையசை கேண்மினென் ருகும்.* (438)

தத்தம்பொருள் இடைச்சொற்களில் மேலே கூறுதவற்றிற் சில.

1. முன்—பின்: காலப்பொருள்—இடப்பொருள்.
2. இனி: கால இடங்களின் எல்லைப்பொருள்.
3. தோறும்—தோறும்: இடப்பன்மைப் பொருள்—தொழிற்பயில்வுப்பொருள்.
4. வாளா—சும்மா: பயனின்மைப் பொருள.
5. ஆவது—ஆதல்—ஆயினும்—தான்: விகற்பப்பொருள்.
6. அந்தோ—அன்னே—ஐயோ—அச்சோ—அரு—ஆஅ—ஓஓ: இரக்கப்பொருள்.
7. ஆ—ஆகா—அம்ம — அம்மா—ஓ—ஓகோ — அம்மம்மா — அச்சோ: வியப்புப்பொருள்.
8. கூ—கூகூ—ஐயோ—ஐயையோ—அச்சப்பொருள்.
9. சீ—சீசீ—சிச்சீ—சை: இகழ்ச்சிப்பொருள்.

இசைநிறை யிடைச்சொற்கள்.

*ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.* (436)

அசைநிலை யிடைச்சொற்கள்.

*யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்*
*சின்றுரை தோரும் போலும் இருந்திட்*
*டன்றாம் தாநதான் கின்றுநின் றசைமொழி* (441)

வியங்கோளசை.

*மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.* (439)

முன்னிலையசை.

*மியாயிக மோமதி அத்தை இத்தை*
*வாழிய மாளஈ யாழமுன் னிலையசை.* (440)

## அநுபந்தம்

### தொல்காப்பியம்.

1. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
   நடைபெற் றியலும்: தமக்கியல் பிலவே.

2. அவைதாம்,
   புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
   வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும்
   வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
   அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
   இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
   தத்தம் குறிப்பிற் பொருள் செய்குநவும்
   ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவுமென்
   றப்பண் பினவே நுவலுங் காலே.

3. முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
   தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
   அன்னவை யெல்லாம் உரிய வென்ப.

இசைநிறை—அசைநிலை.

4. ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை
   ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப.

அசைநிலை.

5. மாவென் கிளவி வியங்கோ ளசைச் சொல்
6. மியாஇக மோமதி இகும்சின் என்னும்
   ஆவயி னாறும் முன்னிலை யசைச் சொல்.
7. அவற்றுள்
   இகுமும் சின்னும் ஏனையிடத் தொடும்
   தகுநிலை யுடைய என்மனார் புலவர்.
8. அம்ம கேட்பிக்கும்
9. ஆங்க உரையசை
10. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும்
11. யாகா
    பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்
    ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி
12. ஆக ஆகல் என்ப தென்னும்
    ஆவயின் மூன்றும் பிரிவி லசைநிலை.

மன்.

13. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

தில்.

14. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

கொன்.

15. அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

உம்.

16. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பா லெட்டே உம்மைச் சொல்லே.

ஓ.

17. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே.

ஏ.

18. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.

என.

19. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி.

என்று.

20. என்றென் கிளவியும் அதனோ ரற்றே.

மற்று.

21. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை.
அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

எற்று.

22. எற்றென் கிளவி இறந்த பொருட்டே.

**மற்றையது.**

23 மற்றைய தென்னுங் கிளவிதானே
சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே.

**மன்ற.**

24. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

**தஞ்சம்.**

25. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே

**கொல்.**

26. கொல்லே ஐயம்.

**எல்.**

27. எல்லே இலக்கம்.
இலக்கம்—விளங்குதற் பொருண்மை உணர்த்தும்.

**குறிப்பு.**

28. நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் மன்னீற் றோவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்.

**குறிப்பின்வரும் இடைச்சொற்கள்.**

ஒலிக்குறிப்பு. — அம்மென—இம்மென—கோவென—சோவென—துடுமென—ஒல்லென—கஃறென—சுஃறென—கடகடென—களகளென—திடுதிடென—நெறுநெறென—படபடென முதலியன

அச்சக்குறிப்பு.—துண்ணென — துணுக்கென — திட்கென—திடுக்கென முதலியன.

விரைவுக்குறிப்பு —பொள்ளென — பொருக்கென — கதுமென—ஞெரேலென—சரேலென முதலியன.

## உரிச்சொல்.—(**Words expressive of abstract qualities.**)

உரிச்சொல். (இன்னதென்பது).

> பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
> ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
> ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல் (442)

பல்வகைப் பண்பும் பகர்பெயர்=இசையும் குறிப்பும் பண்பு மாகிய பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயர். இசை—ஓசை குறிப்பு—மனத்தால் குறித்துணரப்படுவது. பண்பு—பொறியால் உணரப்படும் குணம்.

ஒருகுணந் தழுவிய உரிச்சொல்.

> சால உறுதவ நனிகூர் கழிமிகல் (456)

பலகுணந் தழுவிய உரிச்சொல்.

> கடியென் கிளவி காப்பே கூர்மை
> விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
> விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
> வரையே மன்றல் கரிப்பி னுகும். (457)

குறிப்பு.—உரிச்சொல் குணத்தை மாத்திரம் காட்டும். பண்புப் பெயரும், தொழிற்பெயரும், பெயரெச்ச வினையெச்சங்களும், பெயர் வினைகளின் குணங்கூறுகளை விளக்குவனவாயினும், அவைகள் தத்தம் பாகுபாடுகளைப் பெற்றுவரும். உரிச்சொற்களோ, திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலிய பாகுபாடுகளைப் பெறுவதில்லை. முதனிலையும் இறுதி நிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருள் உணர்த்தல் உரிச்சொல்லிடத்து இயைபுடைத்தன்று. "எழுத்துப் பிரிந் திசைத்தல் இவணியல்பின்றே" என்பது தொல்காப்பியம். "மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்று" என்பது, உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையால் கொள்வதல்லது, அவை அப்பொருளவாதற்குக் காரணம் விளங்கத் தோன்று என்றும் உரைக்கின்றது.

# அநுபந்தம்

## தொல்காப்பியம்.

தமக்கியல்பில்லா இடைச்சொற்போலாது, இசை குறிப்புப் பண்பெனும் பொருட்கு உரியவாய் வருதல் உரிச்சொல்லின் தன்மை. ஈறுபற்றிப் பொருள் விளக்கலும் உருபேற்றலுமின்றிப் பெயரையும் வினையையுஞ் சார்ந்து பொருட்குணத்தை விளக்கலின் உரிச்சொல் பெயரின் வேறென்றுணர்க என்றார் நச்சினார்க்கினியர். பெரும்பான்மையும் செய்யுட்கு உரியவாய் வருதலின் உரிச்சொல்லாயிற்று என்பாருமுளர் (சேனாவரையர்). இவை பண்புப் பெயராயினும் மற்றப் பெயர் வினைகளை விட்டு நீங்காமையின் உரிச்சொல் என வேறு ஓதப்பட்டன (இராமாநுசகவிராயர்).

> உரிச் சொற்கிளவி விரிக்குங் காலை
> இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
> பெயரினும் வினையினும் மெய்தடுமாறி
> ஒருசொல் பலபொருட் குரிமை தோன்றினும்
> பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்
> பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தித்
> தத்தமாபிற் சென்று நிலைமருங்கின்
> எச்சொ லாயினும் பொருள்வேறு கிளத்தல்.

பெயரினும் வினையினும் மெய்தடுமாறி—பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் தம்முருபு தடுமாறி (பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயும் தடுமாறி) தத்தமாபின் சென்று நிலைமருங்கின்—பெயரும் வினையுமாகிய தத்தமக்குரிய நிலைக்களங்களாலே எச்சொல்லாயினும்—கேட்போனால் பொருளுணரப்படாத எவ்வகைப்பட்ட சொல்லாயினும். பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி—பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சார்த்தி, பொருள் வேறு கிளத்தல்—பொருளை வேறுவேறு சொல்லுக.

1. உருவுட்காகும் புரையுயர் வாகும்.
2. குருவுங் கெழுவும் நிறனாகும்மே.
3. மழவுங் குழவும் இளமைப் பொருள.
4. சுர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.
5. தடவும் கயவும் நளியும் பெருமை.
6. சாயல் மென்மை.
7. வம்பு நிலையின்மை.
8. மாதர் காதல்.

9. பிணையும் பேணும் பெட்பின் பொருள.
10. தாவே வலியும் வருத்தமுமாகும்.
11. தமநிறைந்தியலும்.
12. அரியே ஐமை
13. போகாம் உருமென வருஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.
14. வய வலியாகும்.
15. புனிறென் கிளவி ஈன்றணிமைப் பொருட்டே.
16. மதவே மடனும் வலியு மாகும்:
மிகுதியும் வனப்பும் ஆகலுமுரித்தே.
17. புதிதுபடற் பொருட்டே யாணர்க்கிளவி.
18. ஐவியப்பாகும்.
19. வையே கூர்மை.
20 எறுழ்வலியாகும்.

## சொல்லாக்கம்.

### TAMIL—AN AGGLUTINATIVE LANGUAGE.

The manner in which various languages deal with their roots is strongly indicative of their essential spirit and distinctive character; and it is chiefly with reference to their differences in this particular, that the languages of Europe and Asia admit of being arranged into classes. Those classes are as follows:—(1) The monosyllabic, uncompounded, or isolative languages of which Chinese is the principal example, in which roots admit of no change or combination, and in which all grammatical relations are expressed either by auxiliary words or phrases, or by the position of words in a sentence. (2) The Semetic or intro-mutative languages, in which grammatical relations are expressed by internal changes in the vowels of dissyllabic roots. (3) The agglutinative languages, in which grammatical relations are expressed by affixes or suffixes added to the root or compounded with it.

The three classes mentioned above are not separated from one another by hard and fast lines of distinction. Their boundaries overlap one another. Probably all languages consisted at first of isolated monosyllables. The isolative languages have become partly agglutinative, and changes in the internal vowels of roots are not unknown in the agglutinative class. Such internal changes may occasionally be observed even in the Dravidian languages.

It may appear at first sight scarcely credible that the Dravidian roots were originally monosyllabic, when it is considered that the majority of the words in every Dravidian sentence are longer than those of any other language in Asia or Europe (e.g., compare *irukkiradu*,

Tamil, it is, with the Latin *est*), and are inferior in length only to the words of the polysynthetic languages of America. The great length of Dravidian words arises partly from the separation of clashing consonants by the insertion of euphonic vowels, but chiefly from the successive agglutination of formative and inflectional particles and pronominal fragments. In some instances the first syllable of the verbal theme contains the root, whilst the second is a particle anciently added to it, and compounded with it for the purpose of expanding or restricting the signification. The syllables that are added to the inflectional base are those which denote case, tense, person, and number. Hence, whatever be the length and complication of Dravidian words, they may invariably be traced up to monosyllabic roots, by a careful removal of successive accretions. Thus, when we analyse *perugugiradu*, Tam. it increases, we find that the final *adu* represents the pronoun it, *gir* is the sign of the present tense and *perugu* is the base or verbal theme. Of this base, the final syllable *gu* is only a formative, restricting the verb to an intransitive or neuter signification; and by its removal we come to *peru*, the real root, which is used also as an adjective or noun of quality, signifying greatness or great. Nor is even this dissyllable *peru* the ultimate condition of the root; it is an euphonised form of *per*, which is found in *periya* and *perum*, great; and an euphonically lengthened but monosyllable form of the same is *pêr*. Thus, by successive agglutinations, a word of six syllables has been found to grow out of one. In all these forms, and under every shape which the word can assume, the radical element remains unchanged, or is so slightly changed that it can readily be pointed out by the least experienced scholar. The root always stands out in distinct relief, unobscured, unabsorbed, though surrounded by a large family of auxiliary affixes. In the Semitic and Indo-European tongues the root is frequently so much altered that it can scarcely be recognized.

Internal changes in roots :—

தொல் —தோல்   தா —தருகிறது
பெயர் • —பேர்   தந்தேன்
தொகுப்பு—தோப்பு   பெரு—பேர்
வருவார் —வருவோர்   கரு —கார்
யான் —என்   அரு —ஆர்
யாம் —எம்   மூ —மு
நீ —நின்   ஆறு —அறு
நீர் —நும்   எழு —எழு
கெடு —கேடு   பசு—பாசி—பைங்கூழ்
பெறு —பேறு   காண் —கண்டு
கொள் —கோள்   நோ —நோகிறது
வா —வருகிறது   வே —வெந்து
வந்தேன்   சா —செத்தான்.

In the Dravidian languages stability in the root-vowels is the rule, change the exception.

—CALDWELL.

பவணந்திமுனிவர் வடநூல் மேற்கோளாக ஒருமொழிகளை விதந்து பகாப்பதம் பகுபதம் எனத் தமிழில் முதன் முதலில் காரணப்பெயர் தாமேயிட்டு வழங்குவாராயினர். தமிழில் பகுபதவிலக்கண வாராய்ச்சியை இவர்க்குமுன் எவ்விதத்திலும் ஒழுங்காகச் செய்த ஆசிரியர் வேறெவரும் இலர். வடநூல் மேற்கோளாகச் செய்யினும், இவ்வாராய்ச்சி தமிழ்மொழிகளின் வரம்பைக் கடவாமலே திட்பமும் நுட்பமுமாகச் செய்திருக்கின்றது.

சொல்—பதம்—மொழி—கிளவி என்பவை ஒரு பொருளன.
பதம் (இன்னதென்பதும் அதன் வகையும்.)

எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருடரின்
பதமாம். அதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி இயலும் என்ப (128)

ஓரெழுத் தொருமொழி.

உயிர்மவி லாறும், தபநவி லைந்தும்,
கவசவி னாலும், யவ்வி லொன்றும்,
ஆகுநெடில், நொதுவாங் குறி லிரண்டோடு
ஓரெழுத் தியல்பதம் ஆறேழ் சிறப்பின. (129)

ஆ—ஈ—ஊ (flesh)—எ (arrow)—ஐ (beauty)—ஓ (floodgate).
மா—மீ (above)—மூ (old age)—மே (love)—மை—மோ (smell)
தா—தீ—தூ (purity)—தே (god)—தை.
பா (verse)—பூ—பே (foam)—பை—போ.
நா—நீ—நே (love)—நை (suffer)—நோ (pain).
கா (grove)—கூ (earth)—கை—கோ (king).
வா—வீ (death)—வை—வௌ.
சா (death)—சீ (Lakshmi)—சே (bull)—சோ (மதில்)
யா (which).
நொ (endure).
து (eat).

மற்றவை—கு—கௌ—பீ—வே

தொடரெழுத் தொருமொழி. { பகாப்பதம். பகுபதம்.

பகாப்பதம்.

பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை இடையுரி நான்கும் பகாப்பதம். (131)

குறிப்பு —பெயர்ப்பகாப்பதம்—மண்—நீர்—காற்று—நெருப்பு
வினைப்பகாப்பதம்—நட—வா—வாழ்—விடு.
இடைப்பகாப்பதம் — மன் — மற்று—கொல்—போல்.
உரிப்பகாப்பதம்—உறு—தவ—நனி—கழி.

பகுபதம்.

பொருளிடம் காலம் சினைகுணம் தொழிலின்
வருபெயர், பொழுதுகொள் வினைபகு பதமே. (132)

குறிப்பு.—வருபெயர்—இவை காரணமாக வருகின்ற பெயர்ச்சொற்களும், பொழுதுகொள்வினை—தெரிநிலையாகவும் குறிப்பாகவும் காலத்தைக் கொள்ளும் வினைச்சொற்களும், பகுபதம்—பகுபதங்களாகும்.

பொருட்பெயர்ப் பகுபதம் பொன்னன்
இடப் ,, அகத்தன்
காலப் ,, ஓணத்தான்
சினைப் ,, கண்ணன்
குணப் ,, கரியன்
தொழிற் ,, ஊணன்.

**உடன்பாட்டுத் தெரிநிலை வினை**
- வினைமுற்றுப் பகுபதம். நடந்தான்—நடக்கின்றான்—நடப்பான்
- பெயரெச்சப் ,, நடந்த—நடக்கின்ற—நடக்கும்
- வினையெச்சப் ,, நடந்து—நடக்க—நடக்கின்.

**எதிர்மறைத் தெரிநிலைவினை**
- வினைமுற்றுப் பகுபதம் நடந்திலன் — நடக்கின்றிலன்—நடவான்
- பெயரெச்சப் ,, நடவாத
- வினையெச்சப் ,, நடவாது—நடவாமல்.

**உடன்பாட்டுக் குறிப்புவினை**
- வினைமுற்றுப் பகுபதம் பொன்னன் — ஊணன்—அற்று—இற்று-எற்று
- பெயரெச்சப் ,, கரிய—பெரிய
- வினையெச்சப் ,, பைய—மெல்ல

**எதிர்மறைக் குறிப்புவினை**
- வினைமுற்றுப் பகுபதம் அல்லன்-இல்லன்-அன்று-இன்று
- பெயரெச்சப் ,, அல்லாத—இல்லாத
- வினையெர்சப் ,, அன்றி — இன்றி — அல்லாயல் — இல்லாமல்.

தெரிநிலை வினையாலணையும் பெயர்ப்பகுபதம்—நடந்தான்—நடந்தவன்.

குறிப்புவினையாலணையும் பெயர்ப்பகுபதம்—பொன்னன்—பொன்னவன்

பதபத வுறுப்புக்கள்.

பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும். (133)

ஏற்பவை—பொருளமைதிக்கு ஏற்பவைகளை, முன்னி—நினைத்து, புணர்ப்ப—கூட்டி முடிக்க, எப்பதங்களும் முடியும்—எவ்வகைப்பட்ட பகுபதங்களும் முடிவுபெறும்

| சொல். | பகுதி. | சந்தி. | விகாரம். | இடை நிலை. | சாரியை. | விகுதி. |
|---|---|---|---|---|---|---|
| கூனி | கூன் | ... | ... | ... | ... | இ |
| உண்டான் | உண் | ... | ... | ட் | ... | ஆன் |
| உண்டனன் | உண் | ... | ... | ட் | அன் | அன் |
| பிடித்தனன் | பிடி | த் | ... | த் | அன் | அன் |
| நடந்தனன் | நட | த் | த்-ந் ஆனது | த் | அன் | அன் |

செய்யுமெ னெச்சம்.

செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
(செய்யுளு ளும்மூர் தாகலு) முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே. (341)

ஆகும்பொருள் – ஆம்பொருள். போகும்போது – போம்போது, வாவும் புரவி–வாம்புரவி.

"சாரனுட என்தோழியும் கலுழ்மே" கலுழும்–கலுழ்ம் (உயிர் கெட்டது). "அம்பலூருமவனொடு மொழிமே": மொழியும்–மொழிம் (உயிர்மெய் கெட்டது).

பெயர் வினைகள் ஈற்றயல் திரிதல்.

பெயர்வினை யிடத்து னள ய வீற்றயல்
ஆவோ ஆகலும் செய்யுளுள் உரித்தே. (353)

குறிப்பு:—

வில்லான்–வில்லோன். தொடியாள்–தொடியோள். நல்லார்–நல்லோர். கொடுத்தாய்–கொடுத்தோய்.

குறியதன்கீழ் ஆ.

குறியதன் கீழாக் குறுகலும் அதனோ
டுகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின். (172)

நிலா–நில–நிலவு, சுறா–சுற–சுறவு, அரா–அர–அரவு.

இரட்டைக் கிளவி.

இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா. (396)

சலசல,–கலகலக்கும்–மொடுமொடுத்தது.

மொழி யிறுதிப்போலி.

மகர விறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே. (122)

அகம்–அகன், நிலம்–நிலன், (சுரும்பு–சுரும்பர். வண்டு–வண்டர். பந்தல்–பந்தர்.)

மொழி முதற்போலி மொழியிடைப்போலி.

அஇ முதலிடை ஒக்குஞ் சஞயமுன். (123)

| முதல் | இடை |
| --- | --- |
| பசல்—பைசல் | அமச்சு—அமைச்சு |
| மஞ்சு—மைஞ்சு | இலஞ்சி—இலைஞ்சி |
| மயல்—மையல் | அரயர்—அரையர் |

மொழியிடைப்போலி.

ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழும் என்மரும் உளரே. (124)

சேய்நலூர்-சேய்ஞலூர். ஐந்நூறு-ஐஞ்ஞூறு.

எழுத்தின் சாரியைகள்.

மெய்கள் அகாரமும், நெட்டுயிர் காரமும்,
ஐயௌக் கானும், இருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாம் சாரியை பெறும்பிற. (126)

குற்றெழுத்தோடு கான்சாரியை புணரும்போது இடையே ஆய் தம் விரியும்.

## வழக்கு.

இயல்பு வழக்கு { இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ

தகுதி வழக்கு { இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி

[இயல்புவழக்கு—எப்பொருட்கு எச்சொல் இயைந்ததோ அப் பொருளை அச்சொல்லால் வழங்குவது].

இலக்கணமுடையது—இலக்கண நெறியால் வருவது.

| | |
| --- | --- |
| நிலம் | வானம் |
| நீர் | நன்னிலம் |
| தீ | தண்ணீர் |
| காற்று | வெந்நீர் |

இலக்கணப் போலி—இலக்கண மில்லையாயினும் இலக்கண முடையதுபோல் அடிப்பட்ட சான்றோராலே தொன்றுதொட்டு வழங் கப்பட்டு வருவது.

| | |
| --- | --- |
| முன்றில்—இல்முன் | மீகண்—கண்மீ |
| வாயில்—இல்வாய் | கோயில்—கோவில் |
| புறநகர்—நகர்ப்புறம் | பொதியில்—பொதுவில் |
| உலாப்புறம்—புறவுலா | முன்றானை—தானைமுன் |
| முற்பகல்—பகலின்முன் | நுனிவிரல்—விரலின் நுனி. |
| பிற்பகல்—பகலின்பின் | |

மருஉ—தோன்றுதொட்டு வருதலின்றி, இடையிலே, சிலவெழுத்துக் கெட்டும், சிலவெழுத்துத் தோன்றியும், இலக்கணத்திற் சிதைந்து, தானே மருவி வழங்குவது.

அங்கலாய்த்தல்—(அகம—கலாய்)
அங்கை—அகங்கை.
அசசந்தவேளை—அசுரசந்திவேளை
அருமந்தபிள்ளை — அருமருந்தன்ன [பிள்ளை
ஆந்தை—ஆதன் தந்தை
ஆர்—யார்—யாவர்
ஆவாரம்பட்டை—ஆவிரம் பட்டை
ஆறை—ஆற்றூர்
இண்ணுசுருங்கி—என்றூற்சுருங்கி
இன்னணம்—இன்னவண்ணம்.
ஈசல்—ஈசெல்
என், என்னே, என்ன—எவன்
என்தந்தை—எந்தை
எக்கண்டமாய்—ஏககண்டமாய்
ஏகோபித்து—ஏகீபவித்து.
ஒண்டுதல்-ஒன்றுதல்
ஒத்திக்கை—ஒத்திருக்கை
ஒன்னூர்—ஒன்ரூர்
ஓகை—உவகை
கிழங்கன்னபழஞ்சோறு — கிழங்கம் பழஞ்சோறு
குடலை—குடையோலை
குணது—குணக்குள்ளது
குளாம்பல்—குளவாம்பல்
கொசுவம்—(கொசுவணம்) — கொய்சகம்.
சேரங்கா—சேரங்கை
சென்னே—சென்னபட்டிணம்
சோணுடு—சோழனுடு
தஞ்சை—தஞ்சாவூர்
தம்பலம்—தாம்பூலம்
திண்டிவனம்—திருணீவனம்
தின்னனூர்—திருத்தின்னையூர்
திருவள்ளூர்—திருவெவ்வுளூர்
தெனது—தெற்குள்ளது
தேவாங்கு—தேய்வாங்கு
தொட்டாசிணுங்கி — தொட்டாற் சுருங்கி.
தொண்டைநாடு — தொண்டைமாநாடு
தொளாயிரம்-தொள்ளாயிரம்[
நஞ்சை—நன்செய்
நாகை—நாகூர்
நண்டு—ஞெண்டென்பது ஞண்டாய்ப் பின்னர் நண்டெனமரீஇயது
பனைசை—பனையூர்
பாடகம்—பாதகடகம்
பாண்டிநாடு—பாண்டியனுடு
மீந்தோல்—மீந்தோல்
புஞ்செய்—புன்செய்
பூந்தை—பூதன் தந்தை
போஞ்சட்டி—போனகச்சட்டி
மராடி—மரவடி
மலாடு—மலையமாறுடு
முசிட்டெறும்பு-முசிற்றெறும்பு-முயிற்றெறும்பு
மூந்தாணி—முன்றானை
யார், ஆர்—யாவர்
வடாது—வடக்குள்ளது
வடுகந்தை—வடுகன்தந்தை
வேங்கியம்—வியங்கியம்
வேணவா—வேட்கை அவா

[தகுதிவழக்கு — இப்பொருளை அறிதற்கு அமைந்துகிடந்த இச்சொல்லால் சொல்வது தகுதியன்று, வேறொரு சொல்லால் சொல்வது தகுதியென்று நினைத்து வழங்குவது].

இடக்கரடக்கல்—நன்மக்களிடத்தே சொல்லத்தகாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்வது.

ஆப்பி, ஆமூன்வரும் ஈகாரபகரம் (பசுவின் சாணம்)
பகரவீ, பவ்வி—பீ
ஒன்றுக்குப்போனான்—ஜலமோசனம் செய்யப்போனான்
இரண்டுக்குப் போனான் } மலஜலமோசனம் செய்யப்போனான்
கால்வாய்க்குப் போனான் }
கால்கழீஇ வருதும் — மலங்கழீஇ வருதும்

"கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று"—"கான்மேனீர் பெய்துவருதும்"—"நிலவுப் பயன்கொள்ளு நெடுநிலா முற்றம்" என்பனவும் இதற்குதாரணங்கள்.

"அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" என்பது தொல்காப்பியம்

மங்கலம்—மங்கலமில்லாததை யொழித்து மங்கலமாகச்சொல்வது.

திருமுகம்—ஓலை
வெள்ளாடு—காராடு
நன்காடு—இடுகாடு—சுடுகாடு
துஞ்சினார் }
விண்ணுலகடைந்தார் }
பரமபதித்தார் }
சுவர்க்கம்புகுந்தார் }
ஆசாரியன் திருவடியடைந்தார் } செத்தார்
சிவபெருமான் திருவடி நிழலையடைந்தார் }
கண்ணைமூடிக் கொண்டார் }
காலகதியடைந்தார் }

தாலிபெருகிற்று—தாலியறுந்தது—ஒருத்தி கணவனை இழத்தல்
தாலிபெருகித் தங்காளுதல்—தாலிநீக்கிய கைம்பெண் மின்னூலணிதல்—கணவனையிழத்தல்.

குழூஉக்குறி—ஒவ்வொரு கூட்டத்தார் யாதாயினும் ஒரு காரணம் பற்றி ஒருபொருளினது சொற்குறியை யொழித்து வேறொரு சொற்குறியை வழங்குவது.

பறி—பொன் (தட்டார் வழக்கு)
காரை—ஆடை (யானைப்பாகர்)
சொல்விளம்பி—கள் (வேடர்)

பூவெள்ளை—கால் ரூபா } (வர்த்தகர்)
பிஞ்சுவெள்ளை—அரை ரூபா
மதிவெள்ளை—ஒரு ரூபா
சரவெள்ளை—இரண்டு ரூபா
நசியம்—புகையிலைப் பொடி
ரிஷிகணக்கு—ஏழு (பிராமண வழக்கு)

இலக்கண முடைய் திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை இயல்பும்,
இடக்க ரடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல். (267)

வெளிப்படை குறிப்பு.

ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி: அல்லன வெளிப்படை. (269)

## ஆகுபெயர்.

ஆகுபெயராவது ஒருபொருளின் இயற்பெயர் அப்பொருளோடு சம்பந்தமுடைய பிறிதொரு பொருளிற்கு வழங்கிவரும் பெயர். அது பலவகையாக வரும்.

பொருளாகுபெயர் (முதலாகுபெயர்)—தாமரையின் பூவைத் தாமரையென்பது.

இடவாகுபெயர்—அகத்திலிருக்கின்ற மனதை அகமென்பது.

காலவாகுபெயர்—கார்காலத்தி லுண்டாகும் பயிரைக் காரென்பது.

சினையாகுபெயர்—புளியையுடைய மரத்தினைப் புளியென்பது

பண்பாகுபெயர் (குணவாகுபெயர்)—கார்நிறத்தையுடைய மேகத்தைக் காரென்பது.

தொழிலாகுபெயர்—புழுக்கப்பட்ட சோற்றைப் புழுக்கலென்பது.

அளவை:
- எண்ணல் — ஒன்றென்னும் எண்ணையுடைய பொருளை ஒன்றென்பது. உடலின் உறுப்பைக் கால் அரையென்பன.
- எடுத்தல்—வீசையளவைக் கொண்ட பொருளை வீசையென்பது
- முகத்தல்—நாழியளவைக்கொண்ட பொருளை நாழியென்பது.
- நீட்டல்—தடியளவைக் கொண்ட நிலத்தைத் தடி யென்பது.

சொல்லாகுபெயர்—மொழிப்பொருளை யுணர்ந்தானை மொழியுணர்ந் தானென்பது.

தானியாகுபெயர்—விளக்கின் தண்டை விளக் கென்பது.

கருவியாகுபெயர்—திருவாசகமாகிய கருவியால் தொடுத்த யாப்பைத் திருவாசகமென்பதும், திருவாய் மொழியால் தொடுத்த யாப்பைத் திருவாய்மொழியென்பதும்.

காரியவாகுபெயர் — அலங்காரவுணர்ச்சியாகிய காரியத்தை விளக்கும் கருவியாகிய நூலை அலங்காரமென்பது.

கருத்தாவாகுபெயர்—திருவள்ளுவர் செய்த நூலைத் திருவள்ளுவ ரென்பது.

ஆகுபெயர்.

பொருண்முத லாறோ டளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே. (290)

குறிப்பு.—ஒரு பொருளின் இயற்பெயர் யாதானும் ஓர் இயைபு பற்றி வேறு பொருளுக்கு வழங்குதலால் ஆகுபெயரைத் தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியலில் சேர்த்திருக்கிறார். ஒன்றன் பொருட்கண் ஒன்று சேறல் என்னும் ஒப்புமையான் அங்ஙனம் சேர்த்தாரென்பர் சேனாவரையர்.

## அன்மொழித் தொகைச்சொல்.

இடம்புரி—இடமாகிய புரியையுடைய சங்கு.
உயிர்மெய்—உயிரோடு மெய் கூடிய எழுத்து.
எழுகா—எழாகிய காலையுடைய அக்கினி.
ஐம்பால்—ஐந்தாகிய பான்மையுடையது—கூந்தல்.
கறையடி—உரல்போன்ற அடியுடையது—யானை.
கார்கோள்—கடல்.
கிள்ளிகுடி—கிள்ளியுடைய குடிமக்கள் இருக்கும் ஊர்.
கீழ்வயிற்றுக்கழலை—கீழ்வயிற்றின்கண் எழுந்த கழலை போல்வான்.
குடாவடி—குடாவை யொத்த அடிகளையுடையது—கரடி.
கொடுவரி—வளைவாகிய வரிகளையுடையது—புலி.
சுரிகுழல்—சுரிந்த குழலையுடைய பெண்.
துடியிடை—உடுக்கையையொத்த இடையையுடைய பெண்.
தாழ்வாய்—தாழுதலான (தொங்குதலான) வாயையுடையது-யானை

நானிலம்—நான்காகிய நிலவகைகளையுடையது—பூமி.
பூழ்க்கை—துவாரமாகிய கையை யுடையது—யானை.
முந்நீர்—மூன்றாகிய நீர்மையையுடையது—கடல்.
வடகிழக்கு—வடக்கும் கிழக்கும் கூடுகிற கோணதிசை.
வலம்புரி—வலமாகிய புரியையுடைய சங்கு.
கட்செவி—கண்ணாகிய செவியையுடையது—பாம்பு
கவைநா — கவை (கவர்) ஆகிய நாவையுடையது — (கவர்படுதல்—இரண்டுபகுதல்)—பாம்பு.

## முதற் குறிப்பு.

ஆத்திசூடியும் வாக்குண்டாமும் ஔவையா ரியற்றியன.
வெற்றிவேற்கை—அதிவீரராமபாண்டியன் இயற்றியது.
தில்லைவாழந்தணர் சருக்கம்—இலைமலிந்த சருக்கம்—மும்மையாலுல காண்ட சருக்கம் முதலாகத் திருத்தொண்டர் புராணத்தில் வருவன.
"அறத்தாறிதுவென" வெள்ளைக்கிழிபு—யாப்பருங்கலக்காரிகையில் வெள்ளைக் கிழிபுக்குக் காட்டிய உதாரணம் முதற்குறிப்பு.

## தொகைக் குறிப்பு.

ஐவரொடு குந்திவந்தாள்—(ஐவர்—பாண்டவர்)
"நாற்குணமும் நாற்படையா."
"இவைமூன்றும் விட்டதே பேரின்பவீடு"
"ஆண்டியில் இரண்டு பாண்டியில் இரண்டு"
"சுக்கமாகு மைக்தெழுத்து"

## தொழிற் பெயர்.

தல்—செய்தல்—படித்தல்—கோறல்—நடத்தல்
அல்—செயல்—பெறல்—ஆடல்—வறையல்—பொரியல்—பிழியல்
அம்—நோக்கம்—திருத்தம்—ஆட்டம்—ஒற்கம்—வாட்டம்
ஐ—நடை—ஒடை—வகை—கொலை—தடை
கை—வேட்கை—செய்கை—வருகை—நடக்கை—உடுக்கை
வை—பார்வை—கோவை—சேர்வை
கு—போக்கு—அடுக்கு—தடுக்கு
பு—நடப்பு—தோற்பு—கெலிப்பு—வெறுப்பு—ஆர்ப்பு
வு—வரவு—அடைவு—உறவு—முடிவு
தி—செய்தி—மறதி—இறுதி—உறுதி
சி—புணர்ச்சி—ஆட்சி—மீட்சி—காட்சி—தேர்ச்சி

வி—புலவி—கேள்வி—வேள்வி—கல்வி—தோல்வி
உள்—விக்குள்—விளையுள்—பாய்த்துள்—செய்யுள்
காடு—சாக்காடு—நோக்காடு—விழுக்காடு
பாடு—கோட்பாடு
அரவு—தோற்றரவு—தேற்றரவு
ஆனை—வாரானை—(வருதல்)
மை—கடவாமை
து—பாய்த்து
ஆல்—தழால் எழால்
வான்—வருவான் (வருதல்), செய்வான் (செய்தல்)
அடம்—காவடம்—கட்டடம்.

[மை விகுதி செய்தமை செய்கின்றமை என இறந்தகால வினைநிலை நிகழ்கால வினைநிலைகளோடு கூடியும்வரும். துவ்விகுதி செய்தது செய்கின்றது செய்வது என முக்கால வினைநிலைகளோடு கூடியும் வரும்]

## முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

| | | |
|---|---|---|
| தீன் (தின்) | பேறு (பெறு) | ஓத்து (ஓது) |
| ஊண் (உண்) | போர் (பொரு) | உருக்கு (உருகு) |
| கோள் (கொள்) | பாட்டு (பாடு) | பெருக்கு (பெருகு) |
| கேடு (கெடு) | வீச்சு (வீசு) | முறுக்கு (முறுகு) |
| வீடு (விடு) | கூற்று (கூறு) | சுருக்கு (சுருங்கு) |
| பாடு (படு) | எழுத்து (எழுது) | சூட்டு (சூடு) |
| | | வாட்டு (வாடு) |

## பண்புப் பெயர்.

| | |
|---|---|
| மை—நன்மை—தீமை | கு—நன்கு—தீங்கு |
| வெண்மை—செம்மை | றி—நன்றி |
| ஐ—தொல்லை | று—நன்று |
| சி—மாட்சி | அம்—நலம்—குற்றம்—நற்றம் |
| பு—நண்பு—மாண்பு | பம்—இன்பம்—துன்பம் |
| உ—மழவு | னர்—நன்னர் |

## வினைமுதற்பொருள் முதலியன குறிக்கும் விகுதிகள்.

இ—வினைமுதற்பொருள்—அலரி—சேரி (பல குடி சேர்ந்தது) ஐக்துறைப் படக்கி (ஆமை)—ஆளோட்டி—ஆட்கொல்லி.
செயப்படுபொருள்—ஊருணி

கருவிப் பொருள்—மண்வெட்டி—நூற்றுவரைக் கொல்லி—சேர்க்
தாரைக் கொல்லி—ஈயோட்டி — பல்லுக்குத்தி — சமைதா
ங்கி—பாக்குவெட்டி.

ஆண்பால்—வில்லி—அறிவிலி—கற்றுச் சொல்லி — பிறைசூடி—
திருவிலி—நூலோதி—வாளி.

பெண்பால்—பொன்னி—கூனி—அரசி.

ஆள் என்பதோடு சேர்ந்து—முதலாளி—கடனாளி.

பால்காட்டும் பெயர்—மலையாளி.

வடசொல்—பரதேசி—தேசாந்தரி—வனவாசி—புத்திரி—ராக்ஷஸி—

ஐ—வினைமுதற்பொருள்—பறவை—தொழும்பை—கறவை.

செயப்படுபொருள்—தொடை—மடை(சோறு)

கருவிப்பொருள்—பார்வை.

வடசொல்(பெண்பால்)—தனையை—தத்தை(தத்தன் ஆண்பால்),

தமிழ் (ஆண்பால்)—மூக்கறை—செவியறை.

அம்—வினைமுதற்பொருள்—எச்சம். தோட்டம் (பலபொருள் தொக்
கது)

செயப்படுபொருள்—தொல்காப்பியம்

கருவிப்பொருள்—நோக்கம்

காரன்—கடன்காரன்—இங்க்லிஷ்காரன்—வண்டிக்காரன்—வேலைக்காரன்—
மாட்டுக்காரன்—வீட்டுக்காரன்.

காரி.—கடைக்காரி—வேலைக்காரி—சமையல்காரி.

## எண்ணடியாகப் பிறந்த பெயர்.

ஒன்று—ஒருவன்—ஒருத்தி—ஒருவர்
இரண்டு—இருவர்
மூன்று—மூவர்
நான்கு—நால்வர்
ஐந்து—ஐவர்
ஆறு—அறுவர்
ஏழு—எழுவர்
எட்டு—எண்மர்
ஒன்பது—ஒன்பதின்மர்
பத்து—பதின்மர்
இருபது—இருபதின்மர்
நூறு—நூற்றுவர்
ஆயிரம்—ஆயிரவர்

## இடைநிலை பெற்றுவரும் பெயர்.

இச்—செட்டிச்சி—தச்சிச்சி
ச்—வலைச்சி—இடைச்சி—புலைச்சி

ஞ்—அறிஞன்—வலைஞன்—கவிஞன்
த்—பாணத்தி—வண்ணாத்தி—மலையாட்டி—வெள்ளாட்டி
வ்—ஓதுவான்—பாடுவான்

## எழுத்துநிலை மாறிவரும் பெயர்.

| | |
|---|---|
| விசிறி (சிவிறி) | குமிழ் (முகிழ்) |
| மிஞிறு (ஞிமிறு) | நாரிகேளம் (நாளிகேரம்) |
| தசை (சதை) | கண்மீ (மீகண்) |
| வைகாசி—(வைசாகி) | பறையலகு (பலகறை) |

## புதியன புகுதலாய் வந்த சொற்கள்.

[கடிசொல்லில்லைக் காலத்துப்படினே—தொல் ]

சட்டி
அன்னை

சமழ்—"சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே". "தையலாய் சமழா துரை யென்றதே".

சகாரம்—மொழிக்குமுதலில் வருதல் தொல்காப்பியர் காலத்தில் இல்லை—"சகரக்கிளவியுமவற்றோரற்றே, அஐ யௌவெனும் மூன்றலங்கடையே".

## பழையனவாய்க் கழிந்த சொற்கள்.

## (OBSOLETE WORDS.)

அழன்—புழன்.

## பொருள் மாறிவரும் சொற்கள்.

| | |
|---|---|
| ஆலயம | மடையன |
| நாற்றம் | குடி |
| சுவடி | செல்வம் |
| எண்ணெய் | சேவகன் |
| எடை | தூக்கு |
| பொன் | வெள்ளம் |
| கோயில் | ஓடு |
| மலை | அச்சு |
| செம்பு | கடாக்ஷம் |
| அங்குலம் | பலாஹாரம் |
| அடி | உரை |
| | கைம்மாறு |

## உலகினிலாப் பொருள்.

அத்திப்பூ
ஆகாயப்பூ
ஆகாயத்தாமரை
குதிரைக் கொம்பு
சிதம்பரம்
மலடி மகன்
யாமைமயிர்க்கம்பலம
முயற்கோடு
பவளக்கோட்டு நீலயானை
மண்ணிற்படம் }
நூலிற்கடம் }

## பிறவினை.

வி—செய்வி—விடுவி—வருவி
பி—நடப்பி—உண்பி
கு—போக்கு—ஆக்கு
சு—காய்ச்சு—பாய்ச்சு
டு—உருட்டு—வெருட்டு—காட்டு
து—நடத்து—வருத்து—இருத்து—உணர்த்து—தாழ்த்து—புகுத்து
பு—எழுப்பு—கிளப்பு
று—பயிற்று—துயிற்று

வல்லெழுத்து மிகுதல்—கரைத்தான்—தேய்த்தான் — மேய்த்தான்.

வலித்தல் விகாரம்—நீக்கு—அடக்கு—மயக்கு—திருத்து—பொருத்து—ஈட்டு (ஈண்டு).

பகுதியிரட்டித்தல் —ஓட்டு (ஓடு)—மாற்று (மாறு)—உருக்கு (உருகு)—கருக்கு (கருகு)—ஆட்டு (ஆடு)

## செயப்பாட்டு வினை

படு—கட்டப்பட்டான்
உண்—கட்டுண்டான்
பெறு—கட்டப் பெற்றான்.

## மகரவீற்றுச் சில வடமொழிகளும் வேறீற்றுச் சில தமிழ் மொழிகளும் இகரவிகுதிபெற்று

| | |
|---|---|
| அங்குரம்—அங்குரி | தியானம்—தியானி |
| அபகாரம்—அபகரி | தோத்திரம்—தோத்திரி |
| உபகாரம்—உபகரி | பரிகாரம்—பரிகரி |
| கடாக்ஷம்—கடாக்ஷி | பிற்கால்—பிற்காலி |
| கடைக்கண்—கடைக்கணி | புறக்கண்—புறக்கணி |
| சித்திரம்—சித்திரி | வசனம்—வசனி |
| சேகரம்—சேகரி | விரோதம்—விரோதி |

## ஆ—உறு—படு என்பனபெற்று வினையாதல்.

குணமாயிற்று
இன்புற்றான்
கண்ணுற்றேன்
கேள்வியுற்றேன்
வியாதி குணப்படும்
ஸ்திரப்பட்டது.
பயன்படுதல்

மரபு.

எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே (388)

## வடமொழியாக்கம்.

### தற்பவ மொழிகள்.

தற்பவமொழிகளாவன, ஆரியத்திற்கே யுரிய சிறப்பெழுத்தாலும் பொதுவுஞ் சிறப்புமாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதல் முதலிய விகாரங்களைப் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் வடமொழிகளாம்.

1. மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாயும், ஈகாரம் இகரமாயும் ஊகாரம் உகரமாயும் திரியும். மாலை புரி சுயம்பு.

2. ஆரியத்தில் ஏழாம் உயிராகிய ரு (ഋ)இகரமாயும் இருவாயும் திரியும்—ருஷபம் என்பது இடபம் எனவும் ம்ருகம் என்பது மிருகம் எனவும் திரியும்.

3. மெய்யெழுத்துக்களுள் கசடதப என்னும் ஐந்து வருக்கங்களின் நடுகின்ற மும்மூன்றெழுத்துக்களும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்துக்களாகும். ஐகரம் யகரமாகும்.

| | | |
|---|---|---|
| kha — நகம் | cha — சலவாதி | ṭha — பீடம் |
| ga — நாகம் | ja — விசயம் | ḍa — பீடை |
| gha — மேகம் | jha — சருச்சரை | ḍha — திடம் |

| | |
|---|---|
| tha — தலம் | pha — பவம் |
| da — தினம் | ba — பந்தம் |
| dha — தரை | bha — பாரம் |

ja—பங்கயம்

4. தகாமும் da காமும் லகாமும் றகரமாகும் உற்பலம் அற்புதம் கற்பகம்

5. நகரம் மொழியிடையில் பெரும்பாலும் ணகரமாகும். தினம் மனம்.

6. பம்முதல் அவ்வருக்கத்து நான்கு மெய்களும் வகரமாகும். பாவம் கவம் விந்து வீமன்.

7. வகரம் ஒரோவிடத்துப் பகாமுமாகும். காப்பியம்.

8. ஸகாரம் மொழிக்கு முதலில் சகாமும், இடையில் சகாமும் யகாமுமாகும். சாலை பாசம் மயானம்.

9. ஷகாரம் மொழிக்கு முதலில் சகாமும், இடையிலும் கடையிலும் டகாமுமாகும். சண்முகன் விடம் பாடை.

10. ஸகாரம் மொழிக்கு முதலில் சகாமும் இடையில் சகாமும் தகாமுமாகும். சித்தி வாசம் மாதம்.

11. ஹகாரம் மொழிக்குமுதலில் அகாமும், இடையிலும் கடையிலும் ககாமுமாகும். அரி அரன் மோகம் அகி

12. க்ஷகாரம் மொழிக்குமுதலில் ஒருககாமும், இடையிலும்கடையிலும் இருககாமுமாகும் கனம் கீரம் பக்கம் மோக்கம்.

ஏழாமுயிர் இய்யும் இருவும், ஐ வருக்கத்
திடையில் மூன்றும் அவ்வம் முதலும்,
எட்டே யவ்வும், முப்பது சயவும்,
மேலொன்று சடவும், இரண்டு சதவும்
மூன்றே அகவும், ஐந்திரு கவ்வும்,
ஆவீ றையும், ஈயீ றிகாமும் (147)

## சில எழுத்துக்களை முதலாகவுடைய
## வட சொற்கள் தமிழில்
## வேறெழுத்துக்களை முதலிற் பெற்று வருதல்.

ர —ரங்கம் — அரங்கம்
ராமன் — இராமன்
ரோமம் — உரோமம்
ல—லாபம் — இலாபம்
லோபம் — உலோபம்
ய—யக்கன் — இயக்கன்

கம்முத லாமுக் குறிலும்,
லவ்விற் கிம்முத லிரண்டும், யவ்விற்
கிய்யும் மொழிமுத லாகிமுன் வருமே (148)

## வடமொழிகளுள் இரண்டுமெய்கள் இணைந்து
## ஓரெழுத்துப்போல நடக்கும்போது
## வரும் எழுத்துக்கள்.

| | முதல் | இடை |
|---|---|---|
| இ | சிநேகம் | விக்கினம் |
| | தியாகம் | வாக்கியம் |
| | திரவியம் | வக்கிரம் |
| | கிலேசம் | சுக்கிலம் |
| உ | சுமார்த்தன் | பதுமம் |
| | துவசம் | பக்குவம் |
| அ | | அரதநம் |

தனிக்குறிலின் கீழ்நின்ற ரகரம் பின்னின்ற மெய்களோடு இணைந்து நிற்கும்போது உகரம் பெறும். அருக்கன் கருப்பம்.

ககரயகரரகரலகர வகரமகரங்களல்லாதமெய்களுக்கு முன்னின்ற மெய்கள் பெரும்பாலுங் கெடும். ஞானம் விஞ்ஞாபனம் தானம் பரிசம்.

மொழிக்கீற்றில் நிற்கும் ககரமுதலிய வல்லின மெய்கள் இரட்டித்து உகரம் பெறும். வாக்கு விராட்டு.

இணைந்தியல் காலை யரலக் கிகரமும்,
மவ்வக் குகரமும், நகரக் ககரமும்,
மிசைவரும் ரவ்வழி உவ்வு மாம்பிற. (149)

## திரிபு கேடு விகாரங்களால் வருவன

ஸக்தி—சத்தி. சப்தம்—சத்தம்.
கக்ஷி—கட்சி
பர்வதம்—பருப்பதம்
காவ்யம்—காப்பியம்
ஆத்மா—ஆன்மா
கோகநதம்—கோகநகம்
தபநீயம்—தமனியம்
சம்பகம்—சண்பகம்
ரூபம்—உருவம், உருவு, உரு
தர்மம்—தன்மம்
அஸ்தம்—அத்தம். புஸ்தகம்—புத்தகம்
பத்மம்—பற்பம்
ஸ்தூலம்—தூலம்
ஆதித்யன்—ஆதித்தன்

## ஓரோர் விகுதி பெற்றுத் தமிழில் உயர்திணைப் பெயர்களாக வழங்கும் சில வடமொழிகள்.

வான்—குணவான்—தர்மவான்—பலவான்—பாக்கியவான்
மான்—புத்திமான்
காரி—சித்திரகாரி
சாலி—புத்திசாலி—பக்குவசாலி
வந்தன்—தனவந்தன்—திரவிய வந்தன்
வதி—குணவதி—புத்ரவதி—சௌந்தரியவதி
தாரி—விடதாரி
இ—ஞானி—கோபி
இஷ்டன்—தர்மிஷ்டன்—கோபிஷ்டன்

## தத்திதம்.

குறிப்புச் சொற்களும் வினைச்சொற்களும் பிறவும் ஒரு பெயர்ச்சொல் தம்மே லேறிய பிரத்தியத்தையுடையவாய் வேறுபொருள் பயந்து நிற்பின் அவை தத்திதப் பெயர்களென்று அறிந்து உலகிற்கொப்ப முடிக்க.

ஆதித்தியம்—அதிதிக்குச் செய்யும் பூசை
ஆதித்தியன்—அதிதிமகன்
ஆரிடம்—இருடி சம்பந்தமானது

ஐந்திரம்—இந்திரன் செய்த வியாகரணம்
ஔஷதம்—ஔஷதிகளாலானது
காங்கேயன்—கங்கை புத்திரன்
கார்த்திகேயன்—கிருத்திகையின் புத்திரன்
குலீனன்—குலத்தில் விழுமியான்
கைவல்லியம்—கேவலத்தின் தன்மை
கௌசலை—கோசலையிற் பிறந்தாள்
கௌரவன்—குருவர்க்கத்தான்
சாகரம்—சகரன் மக்களால் தோண்டிய கடல்
செம்பியன்—சிபிவர்க்கத்தான்
சைலம்—சிலையாலாயமலை
சைவன்—சிவனைத் தொழுவோன்
சைனன்—சினக்கடவுளைத் தொழுவோன்
சௌமியன்—சோமன் மகன்
சௌரியம்—சூரன் தன்மை
ஜானகி—ஜனகன் புத்திரி
ஸ்மார்த்தர்—ஸ்ம்ருதி யொழுக்கங்களை அனுசரிப்பவர்
தாசரதி—தசரதன் புத்திரன்
தாட்சாயணி—தட்சன் புத்திரி
தார்த்தராட்டிரர்—திருதராட்டிரன் புதல்வர்
தானவர்—தனுவின் புத்திரர்
தைத்தியன்—திதியகன்
தைலம்—திலத்தி (எள்ளி)லிருந்து இறக்கப்படுவது
தௌவாரிகன்—துவாரத்தில் நிற்பவன்
தௌகித்திரன்—துத்திரி (புத்திரி)யின் புத்திரன்
நையாயிகன்—நியாய சாஸ்திர முணர்ந்தவன்
பாகவதன்—பகவத் பக்தியுள்ளவன்
பாகீரதி—பகீரதன் பெண்ணாகிய நதி
பாசுபதன்—பசுபதியைத் தெய்வமாக வுடையவன்
பாணினீயம்—பாணினி செய்த இலக்கணம்
பார்வதி—பர்வதராசன் புத்திரி
பாராசரியம்—பராசரர் செய்த நூல்
பாரம்பரியம்—பரம்பரையை ஒட்டிவருவது
பிராமணன்—பிரம்மஞானமுள்ளவன்
பைத்தியம்—பித்த சம்பந்தம்
பௌத்தன்—புத்தனை வழிபடுவோன்
பௌத்திரன்- புத்திரனுடைய புத்திரன்
பௌராணிகன்—புராணம் சொல்லுகிறவன்

பௌரோகிதன்—புரோகித வேலை செய்பவன்
மார்க்கண்டேயன்—மிருகண்டு முனிவருடைய புத்திரன்
ரௌத்திரம்—ருத்திர சம்பந்தம்
லௌகிகன்—லோக வழியில் நிற்பவன்
வைஷ்ணவன்—விஷ்ணுவைத் தொழுவோன்
வைதிகன்—வேதவழியில் நிற்பவன்
வையாகரணி—வியாகரணம் ஓதுவான்
வைரம்—வீரத்தின் தன்மை

## உபசர்க்கம்.

அ—அக்கிரமம்—அநியாயம்—அநீதி—அசரீரி—அசுத்தம் — அசுசி — அப்பிரதக்ஷணம்.
அதி—அதிரசம்—அதிமதுரம்—அத்தியாவசியம்—அதிரதர்
அதோ—அதோகதி—அதோமுகம்—அதோவாயு
அநு—அநுகூலம்—அநுசன்—அநுகரணம்—அநுவாதம்—அநுபானம்—அநுபந்தம்
அந்—அநாசாரம் — அநந்தம்—அநர்த்தம் — அநேகம் — அநாவிருஷ்டி—அநக்யம்—அநங்கன்.
அப — அபசாரம் — அபசவ்வியம் — அபஜயம் — அபகீர்த்தி — அபக்கியாதி—அபவிர்த்தி
அபி—அபிவிர்த்தி—அபிமானம்—அபிமதம்—அபிநவம்
அவ—அவமதி—அவமானம்—அவலக்ஷணம்—அவகோலம்
ஆ—ஆகிருதி
உப—உபசாரம்—உபாங்கம்—உபநிதி—உபகரணம்—உபகாரம்—உபசாந்தி—உபபலம்—உபபுராணம்
உத்—உத்பவம்—உத்பத்தி
கு—குயுத்தி—குரூபம்—குதர்க்கம்—குக்கிராமம்—குத்ருஷ்டி
சத்—சர்ப்புத்திரர்—சர்க்குணர்—சற்பாத்திரம்—சற்குரு—சற்சங்கம்—சர்ச்சனன்—சற்புத்தி—சற்புருடன்
சம்—சம்பந்தம்—சம்பூரணம்—சம்பவம்—சம்போகம்
சு—சுகுணம்—சுபுத்தி—சுபக்ஷம்—சுவர்ணம்—சுமுகன்—சுமங்கலி—சுதினம்—சுசீலம்—சுகந்தம்
சுய—சுயாதீனம்—சுயபுத்தி—சுயகுணம்—சுயாதிபதி—சுயேச்சை
ஸ—ஸாவகாசம்—ஸாங்கம்—ஸாம்பசிவன்
ஸ்வா (சுவ)—ஸ்வதந்தரம்—ஸ்வதேசம்—ஸ்வாதீனம்—ஸ்வபுத்தி—சுவாநுபவம்—சுவாத்தியாயம்
ஸஹ—ஸஹவாசம்—ஸஹோதரன்—ஸஹகமனம்

துர்—துர்க்குணம்—துர்ப்புத்தி—துராலோசனை—துரப்பியாசம்—துராக்ருதம்—துன்மார்க்கம்
நி—நிசாரம்—நிவிர்த்தி—நிக்கிரகம்—நிச்சிந்தை—நிவர்த்தி
நிர்—நிர்மலம்—நிர்மூலம்—நிராதாரம்—நிர்மானுஷ்யம்-நிர்த்தூளி—நிரந்தரம்—நிரவதி.
நிஷ்—நிஷ்கபடி—நிஷ்களங்கம்—நிஷ்பலம்—நிஷ்கம்பம்—நிஷ்களம்—நிஷ்காரணம்
பர—பரமண்டலம்—பரதேசி—பரபக்ஷம்—பராதீனம்—பரசொத்து
பரி—பரிசுத்தம்—பரிச்சேதம்—பரிவிருத்தி—பரித்தியாகம்—பரிபக்குவம்—பரிபூரணம்
பிர—பிரதேசம்—பிரகாரணம்—பிரபலம்
பிரதி—பிரத்தியட்சம்—பிரதிகூலம்—பிரதிநிதி—பிரத்தியேகம் — பிரத்தியுத்தரம்—பிரதிவாதி
புனர்—புனர் விவாஹம்—புனர் விசாரணை-புனர்பாகம்-புனராகமனம்
வி—விபக்ஷன்—விமலம்—விராகம்—விநாசம்

## ஆண்பால் பெண்பால் காட்டும் வடமொழிகள்.

| ஆண் பெண் | ஆண் பெண் |
|---|---|
| பிதாமகன்—பிதாமகி | ராஜன்—ராஜஞ்—ராணி |
| மாதாமகன்—மாதாமகி | சகரவர்த்தி—சக்ரவர்த்தினி |
| பிதா—மாதா | உத்தமன்—உத்தமி |
| புத்திரன்—புத்திரி | குணவான்—குணவதி |
| தநயன்—தநயை | நாயகன்—நாயகி |
| பௌத்திரன்—பௌத்திரி | ஈசுவரன்—ஈசுவரி |
| பிரபௌத்திரன்—பிரபௌத்திரி | மித்திரன்—மித்திரை |
| தௌஹித்திரன்—தௌஹித்திரி | சிநேகன்—சிநேகை |
| தாஸன்—தாஸ்யை—தாஸி (தாதி) | சண்டாளன்—சண்டாளி |
| தேவன்—தேவி | ராக்ஷஸன்—ராக்ஷஸி |
| வித்துவான்—வித்துவாமசை | ஸுந்தரன்—ஸுந்தரி |
| உபாத்யாயன்—உபாத்யாயை | கனிஷ்டன்—கனிஷ்டை |
| பிராமணன்—பிராமணி | துஷ்டன்—துஷ்டை |
| சிவன்—சிவை | ஸ்ரீமான்—ஸ்ரீமதி |
| இந்திரன்—இந்திராணி | பாலன்—பாலிகை |
|  | பைரவன்—பைரவி |

| உயிர் எழுத்து. | | | மெய் எழுத்து. | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஆரியம். | தமிழ். | தெலுங்கு. | ஆரியம். | தமிழ். | தெலுங்கு. | ஆரியம். | தமிழ். | தெலுங்கு. |
| 𑌅 | அ | అ | 𑌕 | க | క | 𑌨 | ந | న |
| 𑌆 | ஆ | ఆ | 𑌖 | — | ఖ | 𑌪 | ப | ప |
| 𑌇 | இ | ఇ | 𑌗 | — | గ | 𑌫 | — | ఫ |
| 𑌈 | ஈ | ఈ | 𑌘 | — | ఘ | 𑌬 | — | బ |
| 𑌉 | உ | ఉ | 𑌙 | ங | ఙ | 𑌭 | — | భ |
| 𑌊 | ஊ | ఊ | 𑌚 | ச | చ | 𑌮 | ம | మ |
| 𑌋 | — | ఋ | 𑌛 | — | ఛ | 𑌯 | ய | య |
| 𑍠 | — | ౠ | 𑌜 | — | జ | 𑌰 | ர | ర |
| 𑌌 | — | ఌ | 𑌝 | — | ఝ | 𑌲 | ல | ల |
| 𑍡 | — | ౡ | 𑌞 | ஞ | ఞ | 𑌵 | வ | వ |
| — | எ | ఎ | 𑌟 | ட | ట | 𑌶 | — | శ |
| 𑌏 | ஏ | ఏ | 𑌠 | — | ఠ | 𑌷 | — | ష |
| 𑌐 | ஐ | ఐ | 𑌡 | — | డ | 𑌸 | — | స |
| — | ஒ | ఒ | 𑌢 | — | ఢ | 𑌹 | — | హ |
| 𑌓 | ஓ | ఓ | 𑌣 | ண | ణ | — | ழ | — |
| 𑌔 | ஔ | ఔ | 𑌤 | த | త | 𑌳 | ள | ళ |
| 𑌂 | — | ం | 𑌥 | — | థ | — | ற | ఱ |
| 𑌃 | — | ః | 𑌦 | — | ద | — | ன | — |
| — | ஃ | — | 𑌧 | — | ధ | 𑌕𑍍𑌷 | — | క్ష |

| | ஆரிய எழுத்தின் எண். | தமிழில் திரியும் எழுத்து |
|---|---|---|
| உயிர். | ௨ | ஐ |
| | ௪ | இ |
| | ௭ | இ, இரு, ,, |
| மெய். | ௨ | க |
| | ௩ | க |
| | ௪ | க |
| | ௭ | ச |
| | ௮ | ச, ய |
| | ௯ | ச |
| | ௧௨ | ட |
| | ௧௩ | ட |
| | ௧௪ | ட |
| | ௧௭ | த |
| | ௧௮ | த |
| | ௧௯ | த |
| | ௨௨ | ப |
| | ௨௩ | ப |
| | ௨௪ | ப |
| | ௩௰ | ச, ய |
| மெய். | ௩௧ | ச, ட |
| | ௩௨ | ச, த |
| | ௩௩ | அ, க |
| | ௩௫ | க்க |
| முதலில் தோன்றல். | ய | இ |
| | ர | அ, இ, உ |
| | ல | இ, உ |
| இடையில் தோன்றல். | ந | அ |
| | ம | உ |
| | ய, ர, ல | இ |
| | வ | உ |

## அநுபந்தம்.

### தொல்காப்பியம்.

மரபு வழுவமைதி.

தகுதியும் வழக்கும் தழீஇயின வொழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

ஆகுபெயர்.

முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயரொட்டும்
வினைமுத லுரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனையமா பினவே ஆகுபெயர்க் கிளவி.

அவைதாம்
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண்பினவே நுவலுங்காலை.

அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே.

அன்மொழித் தொகைப்பெயர்.

பண்புதொகவரூஉங் கிளவியானும்
உம்மைதொக்க பெயர் வயினானும்
வேற்றுமை தொக்க பெயர்வயினானும்
ஈற்றுநின்றியலும் அன்மொழித் தொகையே.

வீரசோழியம் (தத்திதப் படலம்)

முந்திய வர்க்கங்க ளைந்தினும் முன்னொற்றின் மூன்றடங்கும்
பந்தியிற் றெய்வ மொழிமுதல் யவ்வேல் பகருமிய்யாம்
வந்திடும் லவ்விற் குகாரமுமாகும் வரில்ரகரம்
அந்த விரண்டொ டகாரமு மாமென்பர் ஆயிழையே (6)

முதலொற் றிரட்டிக்கும்முப்பத்தொன் றெய்திடின் முன்பினிலீ
நிதமிக்க வைந்தாமெய் ஆகுந்தனியே இதனயற்குப்
பதமிக்க சவ்வரும் எண்ணுன்கு தவ்வாம். முப் பானுறுமூன்
றதனுக்கு லோபமும் யவ்வொடுகவ்வும் அறைவர்களே. (7)

கூட்டெழுத்தின்பின் யரலக்கள் தோன்றிடின் கூட்டிடையே
ஓட்டெழுத்தாகப் பெறுமொ ரிகாரம் வவ்வுக் கொருவ்வாம்
மீட்டெழுத் துத்தமிழல்லன போம். வேறு தேயச்சொல்லின்
மாட்டெழுத்தும் மிதனுலறி மற்றை விகாரத்தினே. (৮)

## தொடர் மொழி.

### பதங்கள் பொருந்துந் தொடர்ச்சி.

**தழுவுதொடர்.**—பொருட் பொருத்தமுறத் தழுவிய தொடர்.

வேற்றுமை யைம்முத லாறும். அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே. (152)

**தொகாநிலைத் தொடர் மொழி.**

முற்றீ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி அடுக்கிவை தொகாநிலை. (374)

**தொகைநிலைத் தொடர் மொழி.**

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல். (361)

வேற்றுமை வினைபண் புவமை உம்மை
அன்மொழி யெனவத் தொகையா றாகும். (362)

**வேற்றுமைத் தொகை.**

இரண்டு முதலாம் இடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே. (363)

வினைத்தொகை.

காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை. (364)

காலம் கரந்த பெயரெச்சம்—காலம்பற்றிப் புடைபெயரும் வினை யுருபாகிய தம்மிறுதிகள் தொக்க பெயரெச்ச வினைகள்.

பண்புத்தொகை.

பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை (365)

பண்பை விளக்கும் மொழி—பண்போடு பண்பிக்கு உளதாகிய ஒற்றுமை நயத்தை விளக்குதற்கு வரும் ஆகிய என்னும் பண்புருபு.

உவமத்தொகை.

உவம வுருபில துவமத் தொகையே. (366)

உம்மைத்தொகை.

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான் களவையுள் உம்மில தத்தொகை. (368)

அன்மொழித்தொகை.

ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி. (369)

ஐந்தொகைமொழிமேல்—வேற்றுமைத் தொகை முதலிய ஐவகைத தொகைநிலைத் தொடர்மொழிகளுக்கும் புறத்தே. பிறதொகல்—அவை யல்லாத பிறமொழிகளாகிய உருபுகள் தொக்குவருவன.

தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள் படுதல்.

தொக்குழி மயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப (373)

தழாத்தொடர். — நிலைமொழியானது வருமொழியைப் பொருட் பொருத்தமுறத் தழுவாத தொடர்.

இடைப்பிறவரல்.

உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை இடைப்பிற வரலுமாம் ஏற்பன. (356)

## தொடர் மொழி.

தொகாநிலை. தொகைநிலை.

வேற்றுமை.

| | |
|---|---|
| வேற்றுமைத்தொகா நிலைத்தொடர். | வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். |

அல்வழி.

| தழுவு தொடர். | |
|---|---|
| எழுவாய்த்தொடர். | வினைத்தொகை. |
| விளித்தொடர். | பண்புத்தொகை |
| வினைமுற்றுத்தொடர். | உவமைத்தொகை. |
| பெயரெச்சத்தொடர். | உம்மைத்தொகை. |
| வினையெச்சத்தொடர். | அன்மொழித்தொகை. |
| இடைச்சொற்றொடர். | |
| உரிச்சொற்றொடர். | |
| அடுக்குத்தொடர். | |

## புணர்ச்சி.

### புணர்ச்சி யிலக்கணத்தில் அறியத்தக்க எழுத்திலக்கணம்.

உயிர்மெய்.

ஆய்தம்.

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. (90)

குற்றியலிகரம்.

யகரம் வரக்குற ளுத்திரி இகரமும்
அசைச்சொன் மியாவின் இகரமும் குறிய. (93)

குற்றியலுகரம்.

நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகாரம்
அஃகும். பிறமேற் றொடரவும் பெறுமே (94)

மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்.

பன்னீ ருயிரும் கசதந பமவய
ஞ ங வீ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல். (102)

உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல். (103)

அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல். (104)

அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல். (105)

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| வ | வா | வி | வீ | — | — | வெ | வே | வை | — | — | வௌ |
| ய | யா | — | — | யு | யூ | — | — | — | — | யோ | யௌ |
| ஞ | ஞா | — | — | — | — | ஞெ | — | — | ஞொ | — | — |
| ங | — | — | — | — | — | — | — | — | — | — | — |

மொழிக்கு இறுதியில் வரும் எழுத்துக்கள்.

ஆவி ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள மெய்
சாயு முகரம் நாலாறும் ஈறே. (107)

புணர்ச்சி (இன்ன தென்பது.)

மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்,
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்

பொருளில் பொருந்துழி, நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே (151)

இயல்புப் புணர்ச்சி.

விகார மனைதது மேவல தியல்பே (153)

விகாரப் புணர்ச்சி.

தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும் (154)

செய்யுள் விகாரம்.

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி (155)

ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே (156)

## புணர்ச்சி.

### I. உயிரீற்றின் முன் உயிர்.

அ

பல + அணி = பலவணி
ஆன்ற + அறிவு = ஆன்றவறிவு
வற்றிய + ஓலை = வற்றியவோலை
வந்த + இடம் = வந்தவிடம
இள + அரசு = இளவரசு
தூய + உள்ளம் = தூயவுள்ளம்
நில + உப்பு = நிலவுப்பு

ஆ

வினா + எழுத்து = வினவெழுதது
பலா + இலை = பலாவிலை
ஆ + உரிஞ்சி = ஆவுரிஞ்சி
விலா + எலும்பு = விலாவெலும்பு
பா + இனம் = பாவினம்
கூடா + ஒழுக்கம் = கூடாவொழுக்கம்
புரு + அரசு = புருவரசு.

இ

மணி + ஓசை = மணியோசை
வணி + ஏற்றம் = வணியேற்றம்
பிடி + அரிசி = பிடியரிசி
தடி + அடி = தடியடி
பொதி + எருது = பொதியெருது
ஈட்டி + எழுபது = ஈட்டியெழுபது

இ

எறி + ஈட்டி = எறியீட்டி
புளி + ஏப்பம் = புளியேப்பம்

ஈ

தீ + ஒழுக்கம் = தீ யொழுக்கம்
ஈ + ஓட்டி = ஈயோட்டி
தீ + எச்சம் = தீ யெச்சம்
சீ + எனல் = சீயெனல்

| உ | ஊ |
|---|---|
| திரு + அடி = திருவடி | பூ + அரசு = பூவரசு |
| திரு + உள்ளம் = திருவுள்ளம் | பூ + ஆடை = பூவாடை |
| திரு + அரங்கம் = திருவரங்கம் | பூ + இதழ் = பூவிதழ் |
| திரு + ஆனைக்கா = திருவானைக்கா | பூ + அணை = பூவணை |
| நடு + எலும்பு = நடுவெலும்பு | பூ + உலகு = பூவுலகு |
| அது + ஏ = அதுவே | |
| இது + ஓ = இதுவோ | |

ஏ

அவனே + இவன் = அவனேயிவன்
இவனே + அரசன் = இவனே யரசன்.
சே + அடி = சேவடி
ஏ + எறிந்தான் = ஏவெறிந்தான்
சே + உழுதது = சேவுழுதது

ஐ

| | |
|---|---|
| கை + எழுத்து = கையெழுத்து | தலை + ஈற்று = தலையீற்று |
| வாழை + இலை = வாழையிலை | சிலை + எழுபது = சிலையெழுபது |
| தலை + அணை = தலையணை | யானை + ஏற்றம் = யானையேற்றம். |
| வினை + இயல் = வினையியல் | |

ஓ

கோ + இயல் = கோவியல்
கோ + எடுத்தல் = கோவெடுத்தல்
எவனோ + ஒருவன் = எவனோ வொருவன்
போ + என்றான் = போவென்றான்
ஐயோ + இறந்தான் = ஐயோ விறந்தான்.

மேல்காட்டிய உதாரணங்களை ஆராய்ந்துபார்க்குமிடத்தில் இ-ஈ-ஐ என்கிற உயிர்களின்முன் உயிர் வந்தால் இடையில் ய் தோன்றுவதும், மற்றவைகளின் இடையில் வ் தோன்றுவதும், இடைச்சொல் ஏகாரத்துக்குமுன் ய் என்பதும் மற்ற ஏகாரங்களின்முன் வ் என்பதும் தோன்றுவதும் விளக்கமாகும்.

நிலைமொழியீற்றிலும் வருமொழி முதலிலும் நின்ற உயிர்களை உடம்படுத்து (உடன்படுத்து)தலால் இவை உடம்படுமெய் என வழங்கப் பெறும்.

> இ ஈ ஐவழி யவ்வும், ஏனை
> உயிர்வழி வவ்வும், ஏமுன் இவ் விருமையும்,
> உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும். (162)

## சுட்டுவினா முன்உயிர்.

அ + அணி = அவ்வணி
அ + எருது = அவ்வெருது
இ + இடம் = இவ்விடம்
இ + உலகம் = இவ்வுலகம்
உ + இடம் = உவ்விடம்
எ + ஊர் = எவ்வூர
எ + இரண்டு = எவ்விரண்டு.

சுட்டெழுத்துக்களுக்கு முன்னும் எகர வினாவெழுத்துக்களுக்கு முன்னும் உயிர் வந்த விடத்து வ் தோன்றுதல் மேற்காட்டிய உதாரணங்களால் தெளிவாகும்.

எகர வினா முச்சுட்டின முன்னர்
உயிரும் (யகரமும்) எய்தின் வவ்வும். (193)

## குற்றிய லுகரத்தின்முன் உயிர்.

வரகு + அரிசி = வரகரிசி
கடுகு + அளவு = கடுகளவு
கருக்கு + அரிவாள் = கருக்கரிவாள்
கருத்து + உரை = கருத்துரை
குறிப்பு + எச்சம் = குறிப்பெச்சம்
பொழிப்பு + உரை = பொழிப்புரை
கற்பு + இலக்கணம் = கற்பிலக்கணம்.
குரங்கு + ஆட்டம் = குரங்காட்டம்
பஞ்சு + அணை = பஞ்சணை
நெஞ்சு + எலும்பு = நெஞ்செலும்பு
குண்டு + உருட்டு = குண்டுருட்டு
குண்டு + ஊசி = குண்டூசி
விருந்து + ஓம்பல் = விருந்தோம்பல்
ஐந்து + ஊர் = ஐந்தூர்
ஐந்து + எழுத்து = ஐந்தெழுத்து
வரம்பு + அழிதல் = வரம்பழிதல்
மூன்று + அரை = மூன்றரை
ஓய்வு + இன்மை = ஓய்வின்மை
சார்பு + எழுத்து = சார்பெழுத்து
ஆறு + அரை = ஆறரை
காகு + அரிது = காகரிது
எஃகு + அருமை = எஃகருமை.

## முற்றியலுகரம்.

கதவு + அழகிது = கதவழகிது　　அரவு + அணை = அரவணை
அது + ஐ = அதை　　இழவு + ஓலை = இழவோலை
நிலவு + ஒளி = நிலவொளி

இவ்வுதாரணங்களை நோக்குமிடத்துக் குற்றியலுகரத்துக்கு முன்னும் சில முற்றியலுகரத்துக்குமுன்னும் உயிர் வரும்போது குற்றியலுகர முற்றியலுகர வீறுகள் கெடுவது தெரியவரும்.

உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
(யவ்வரின் இய்யாம்) முற்றுமற் றொரோவழி　　(164)

## டகர றகரங்களின் மேலேறிய நெடிற்றொடர் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்.

காடு + அரண் = காட்டரண்　　வரடு + ஆடு = வரட்டாடு
காடு + ஆறு = காட்டாறு　　குருடு + அடி = குருட்டடி
நாடு + ஆண்மை = நாட்டாண்மை　　கிணறு + ஓரம் = கிணற்றோரம்
நூறு + ஐந்து = நூற்றைந்து　　மூயிறு + எறும்பு = மூயிற்றெறும்பு
ஆறு + ஒழுக்கு = ஆற்றொழுக்கு　　வயிறு + எரிச்சல் = வயிற்றெரிச்சல்

இவ்வுதாரணங்களில் டகரமும் றகரமும் இரட்டித்து வருவது தெரிகின்றது.

நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே　　(183)

## மையீற்றுப் பண்புப்பெயர் முன் உயிர்.

பசுமை + ஓலை = பச்சோலை
பசுமை + ஓந்தி = பச்சோந்தி
வெண்மை + ஆடு = வெள்ளாடு
வெண்மை + உள்ளி = வெள்ளுள்ளி

புதுமை + உரை = புத்துரை
நெடுமை + எழுத்து = நெட்டெழுத்து
குறுமை + எழுத்து = குற்றெழுத்து
குறுமை + ஏவல் = குற்றேவல்
குறுமை + உயிர் = குற்றுயிர்
சிறுமை + ஆடை = சிற்றாடை
சிறுமை + எறும்பு = சிற்றெறும்பு
சிறுமை + உளி = சிற்றுளி.

வருமொழி முதலில் உயிர் வந்தபோது, மையீற்றுப் பண்புப்பெயர்கள் ஈறு கெட்டு நடுநின்ற உகாரமுங்கெட்டு உகரங்கெட நின்ற தம்மொற்றிரட்டுவன வாகின்றன.

ஈறுபோதல் (இடையுகரம் இய்யாதல்
ஆதிநீடல் அடிஅகரம் ஐயாதல்)
தன்னொற்றிரட்டல் (முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும்) பண்பிற் கியல்பே (136)

## II. மெய்யீற்றின் முன் உயிர்.

உயிர் + எழுத்து = உயிரெழுத்து.
நீர் + ஓட்டம் = நீரோட்டம்
பால் + ஆறு = பாலாறு
மயில் + இனம் = மயிலினம்
சரண் + அடைதல் = சரணடைதல்
குலம் + இலான் = குலமிலான்
புரம் + எரித்தோன் = புரமெரித்தோன்
உருள் + அரிசி = உருளரிசி
தமிழ் + எழுத்து = தமிழெழுத்து
பொருள் + இலக்கணம் = பொருளிலக்கணம்
கான் + அகம் = கானகம்
தேன் + ஈ = தேனீ.

இவ்வுதாரணங்களில் நிலைமொழியீற்று மெய்யின்மேல் வருமொழி முதலிலுள்ள உயிர் ஒன்றுபட்டு இணங்கி நிற்பது காணப்படும்.

உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே (204)

## தனிக்குறிலின் ஒற்றுமுன் உயிர்.

தண் + அளி = தண்ணளி
விண் + உலகம் = விண்ணுலகம்
மண் + ஆசை = மண்ணாசை
நம் + ஆழ்வார் = நம்மாழ்வார்
மெய் + எழுத்து = மெய்யெழுத்து
பொய் + உறக்கம் = பொய்யுறக்கம்
கல் + எறி = கல்லெறி
புள் + அரசு = புள்ளரசு
முள் + எலும்பு = முள்ளெலும்பு
மன் + உயிர் = மன்னுயிர்.

வருமொழிமுதலில் உயிர் வந்த விடத்து, தனிக்குறிலும் ஒற்றுமாக வந்த நிலைமொழியின் ஒற்று இரட்டிவருதல் காண்க.

தனிக்குறில் முன்னொற் றுயிர்வரின் இரட்டும். (205)

## மகரவீறு.

மாம் + அடி = மரவடி — குலம் + ஒழுக்கம் = குலவொழுக்கம்
நிலம் + அறை = நிலவறை — வட்டம் + ஆழி = வட்டவாழி
மரம் + ஆணி = மரவாணி — பவளம் + இதழ் = பவளவிதழ்

உயிரை முதலாகவுடைய வருமொழி வந்தவிடத்து, மகரவீற்று நிலைமொழிகளின் மவ்வீறு கெட்டு உடம்படுமெய் பெற்று வருகின்றன.

மவ்வீ றொற்றொழிந் துயிரீ றொப்பவும்
(வன்மைக் கினமாத் திரிபவும்) ஆகும், (219)

---

## III. உயிரீற்றின்முன் மெய்.

### உயிர்முன் வலி.

அ. சுருங்க + சொல்லல் = சுருங்கச் சொல்லல்
உயர + பறத்தல் = உயரப்பறத்தல்
விளங்க + காட்டல் = விளங்கக்காட்டல்
வெற்றென + தொடுத்தல் = வெற்றெனத் தொடுத்தல்.

ஆ. நா + தழும்பு = நாத்தழும்பு
பலா + காய் = பலாக்காய்
துலா + கோல் = துலாக்கோல்
பலா + பழம் = பலாப்பழம்
வினை + பெயர் = வினைப்பெயர்
பலா + சுளை = பலாச்சுளை

இ. வெள்ளி + கிழமை = வெள்ளிக்கிழமை
பூச்சி + கடி = பூச்சிக்கடி
வழி + செலவு = வழிச்செலவு
பழி + சொல் = பழிச்சொல்
வழி + துணை = வழித்துணை
மாசி + திங்கள் = மாசித்திங்கள்
வழி + போக்கர் = வழிப்போக்கர்
அத்தி + பூ = அத்திப்பூ
கத்தி + பிடி = கத்திப்பிடி

ஈ + கடன் = தீக்கடன்
தீ + சட்டி = தீச்சட்டி
சீ + பால் = சீப்பால்
தீ + பொறி = தீப்பொறி.

உ. கொக்கு + கால் = கொக்குக்கால்
எடுத்து + காட்டல் = எடுத்துக்காட்டல்
பேச்சு + துணை = பேச்சுத்துணை
உப்பு + தண்ணீர் = உப்புத் தண்ணீர்
குறுக்கு + சட்டம் = குறுக்குச் சட்டம்
நெருப்பு + பொறி = நெருப்புப் பொறி
கன்று + குட்டி = கன்றுக்குட்டி.

ஐ. கை + கூலி = கைக்கூலி
கை + சாத்து = கைச்சாத்து
திசை + சொல் = திசைச்சொல்
இடை + சேரி = இடைச்சேரி
வாழை + தண்டு = வாழைத்தண்டு
சாரை + பாம்பு = சாரைப்பாம்பு.
கொட்டை + பாக்கு = கொட்டைப்பாக்கு
வாழை + குலை = வாழைக்குலை
பெட்டை + கோழி = பெட்டைக்கோழி
குதிரை + பந்தயம் = குதிரைப் பந்தயம்.

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதபமிகும் (விதவாதன மன்னே) (165)

## தனி ஐ.

கை + நீட்சி = கைந்நீட்சி — கை + நலம் = கைந்நலம்
கை + முதல் = கைம்முதல் — ஐ + நூறு = ஐந்நூறு
கை + கொடி = கைங்கொடி — ஐ + முகன் = ஐம்முகன்

(எண் மூவெழித்..............ளியல்பும்.

குறில்வழியத்) தனிஐ(ந் தொது)முன்மெலி
மிகலுமாம் (158)

## சுட்டு வினா.

இ + திறம் = இத்திறம் — அ + புறம் = அப்புறம்
அ + நெறி = அந்நெறி — எ + மலை = எம்மலை
அ + வரி = அவ்வரி — எ + வழி = எவ்வழி
அ + மரம் = அம்மரம் — எ + பொருள் = எப்பொருள்.

சுட்டுக்களின் முன்னும் எகரவினாவின்முன்னும் எந்த மெய் வருகிறதோ அந்தமெய் இரட்டும்.

எகரவினா முச்சுட்டின் முன்னர்
(உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்)
பிறவரின் அவையும் (தூக்கிற்சுட்டு
நீளின்யகரமும்) தோன்றுதல் நெறியே (163)

## சிலமரப் பெயர்களின் ஈற்றுயிர்முன் வலி.

களா + கனி = களாங்கனி
விளா + காய் = விளாங்காய்
காயா + பூ = காயாம்பூ
சே + கன்று = சேங்கன்று
மா + கனி = மாங்கனி
மா + பழம் = மாம்பழம்
மா + துளிர் = மாந்துளிர்.

சில மரப்பெயர்களின் முன்னே வல்லெழுத்து வந்தால் அவற்றிற் கினமாகிய மெல்லெழுத்து மிகுதல் இவ்வுதாரணங்களால் அறியப்படும்.

மரப்பெயர் முன்னர் இனமெல்லெழுத்து
வரப்பெறு னவும்உள வேற்றுமை வழியே (166)

## சுவைப்புளிப் பெயர்முன் வலி.

புளி + கறி = புளிங்கறி
புளி + சோறு = புளிஞ்சோறு
புளி + தயிர் = புளிந்தயிர்
புளி + பாளிதம் = புளிம்பாளிதம்

சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும (175)

பூ + குழல் = பூங்குழல்
பூ + கொடி = பூங்கொடி
பூ + கொத்து = பூங்கொத்து
பூ + சோலை = பூஞ்சோலை
பூ + தோட்டம் = பூந்தோட்டம்
பூ + பந்தல் = பூம்பந்தல்
பூ + பனை = பூம்பனை
பூ + பாளை = பூம்பாளை

பூ என்கிற பெயர்முன் வல்லினம் வந்தால் அதற்கினமாகிய மெல் லினம் வருகின்றது

பூப்பெயர்முன் இனமென்மையுந் தோன்றும் (200)

கருமை + குதிரை = கருங்குதிரை
கருமை + குரங்கு = கருங்குரங்கு
கருமை + குவளை = கருங்குவளை
கருமை + சீரகம் = கருஞ்சீரகம்
குறுமை + கோல் = குறுங்கோல்
குறுமை + தடி = குறுந்தடி
குறுமை + சிரிப்பு = குறுஞ்சிரிப்பு
கொடுமை + கோல் = கொடுங்கோல்
செம்மை + தாமரை = செந்தாமரை
செம்மை + தாள் = செந்தாள்
செழுமை + கமலம் = செழுங்கமலம்
நெடுமை + காலம் = நெடுங்காலம்
நெடுமை + சுவர் = நெடுஞ்சுவர்
நெடுமை + பொழுது = நெடும்பொழுது
பசுமை + புல் = பசும்புல்
பெருமை + செல்வம் = பெருஞ்செல்வம்

இவ்வுதாரணங்களில் ஈறுகெட்டு இனமிகுதல் காண்க. நன்னூல் 136 சூ. பார்க்க.

செம்மை + ஞாயிறு = செஞ்ஞாயிறு
செம்மை + நெல் = செந்நெல்
வெம்மை + நீர் = வெந்நீர்

## டகர றகரங்களின் மேலேறிய நெடிற்றொடர் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்.

ஈறு + மெய் = ஈற்று மெய்
காடு + மனிதன் = காட்டுமனிதன்
மாடு + வண்டி = மாட்டுவண்டி
மேடு + நிலம் = மேட்டுநிலம்
வீடு + மணியம் = வீட்டுமணியம்
வீடு + வாடகை = வீட்டுவாடகை
ஆடு + கால் = ஆட்டுக்கால்
கோடு + பூ = கோட்டுப்பூ
வீடு + கொல்லை = வீட்டுக்கொல்லை.
ஏறு + பனை = ஏற்றுப்பனை
எருது + மாடு = எருத்துமாடு
குருடு + கண் = குருட்டுக்கண்
செவிடு + பிள்ளை = செவிட்டுப்பிள்ளை
முரடு + குணம் = முரட்டுக் குணம்
ஆறு + கரை = ஆற்றங்கரை
ஆறு + கால் = ஆற்றங்கால்
நாறு + கால் = நாற்றங்கால்

நெடிலோடுயிர்த் தொடர்க் குற்றுகரங்களுள்
டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே (183)

## மென்றொடர்க் குற்றியலுகரவீறு.

இரும்பு + பாரை = இருப்புப்பாரை
கரும்பு + கட்டி = கருப்புக்கட்டி
கரும்பு + வில் = கருப்புவில்
கஞ்சு + மரம் = கச்சுமரம்
கஞ்சு + மருந்து = கச்சுமருந்து
செம்பு + பட்டயம் = செப்புப்பட்டயம்
இரும்பு + முள் = இருப்புமுள்
செம்பு + பாளம் = செப்புப்பாளம்
மருந்து + பை = மருத்துப்பை
மருந்து + மரம் = மருத்துமரம்
ஒன்று + மாடு = ஒற்றைமாடு
இரண்டு + பாய்ச்சல் = இரட்டைப் பாய்ச்சல்

இவைகளில் மென்றொடர்கள் வன்றொடராதல் காண்க.

மென்றொடர் மொழியுள் சிலவேற்றுமையில்
தம்மின வன்றொடர் ஆகாமன்னே (184)

---

## IV. மெய்யீற்றின்முன் மெய்

### ணனமுன் வல்லினம்.

| வேற்றுமை | அல்வழி |
|---|---|
| மண் + குடம் = மட்குடம் | மண்குறிது |
| மண் + சாடி = மட்சாடி | மண்சிறிது |
| மண் + தாண் = மட்டேண் | மண்டீது |
| மண் + பானை + மட்பானை | மண்பெரிது |
| பொன் + குடம் = பொற்குடம் | பொன்குறிது |
| பொன் + சாடி = பொற்சாடி | பொன் சிறிது |
| பொன் + தாண் = பொற்றாண் | பொன்றீது |
| பொன் + பானை = பொற்பானை | பொன் பெரிது |

### ணனமுன் மெல்லினம் இடையினம்.

| | |
|---|---|
| மண்மாட்சி | பொன்மாட்சி |
| மண்ஞாற்சி | பொன்ஞாற்சி |
| மண்யாப்பு | பொன்யாப்பு |
| மண்வன்மை | பொன்வன்மை |

ணன வல்லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்புமாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினும் இயல்பாகும்மே (209)

### ணனமுன் நகரம்.

அல்வழி

| | |
|---|---|
| தாண் + நன்று = தாணன்று | |
| அரண் + நன்று — அரணன்று | அரணன்மை |
| வான் + நன்று = வானன்று | வானன்மை |
| அரசன் + நல்லன் = அரசனல்லன் | அரசனன்மை |

குறிலணைவில்லா னணக்கள் வந்த
நகரம் திரிந்துழி நண்ணும் கேடே (210)

### ணனமுன் தகரநகரம்

பொன் + தீது = பொன்றீது
பொன் + நன்று = பொன்னன்று
மண் + தீது = மண்டீது
மண் + நன்று = மண்ணன்று

னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ஆயுங்காலை (237)

### மகரவீற்றின்முன் நாற்கணம்.

மரம + அடி = மரவடி
மரம் + கட்டை = மரக்கட்டை
நிலம் + கரி = நிலக்கரி
அறம் + சாலை = அறச்சாலை
நிலம் + துளசி = நிலத்துளசி
குலம் + பகை = குலப்பகை
வலம் + பக்கம் = வலப்பக்கம்

மனம் + கரைதல் = மனங்கரைதல்
மனம் + சலித்தல் = மனஞ்சலித்தல்
உண்ணும் + சோறு = உண்ணுஞ்சோறு
மனம் + திருத்தல் = மனந்திருத்தல்

மரம் + நார் = மரநார்
மரம் + நீண்டது = மரநீண்டது
வட்டம் + நேமி = வட்டநேமி
வட்டம் + வடிவம் = வட்ட வடிவம்
பவளம் + வாய் = பவளவாய்
மரம் + வேர் = மரவேர்
மரம் + வேலி = மரவேலி

மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும் (219)

### யகரமுன் வலி.

நெய் + குடம் = நெய்க்குடம்
பேய் + கரும்பு = பேய்க்கரும்பு
நெய் + சிக்கு = நெய்ச்சிக்கு
பேய் + சுரை = பேய்ச்சுரை

### ரகரமுன்வலி.

ஊர் + குருவி = ஊர்க்குருவி
நீர் + குடம் = நீர்க்குடம்
நீர் + சால் = நீர்ச்சால்
நீர் + சுழி = நீர்ச்சுழி

யகரமுன் வலி.

நெய் + திரி = நெய்த்திரி
பொய் + தலை = பொய்த்தலை
பொய் + பத்திரம் = பொய்ப்பத்திரம்
தாய் + பால் = தாய்ப்பால்

ரகரமுன் வலி.

தேர் + தட்டு = தேர்த்தட்டு
ஏர் + தொழில் = ஏர்த்தொழில்
ஊர் + பகை = ஊர்ப்பகை
ஏர் + பூட்டு = ஏர்ப்பூட்டு

ழகரமுன் வலி.

கீழ் + கணக்கு = கீழ்க்கணக்கு
வாழ் + துணை = வாழ்த்துணை
கீழ் + படிவு = கீழ்ப்படிவு
யாழ் + பாணர் = யாழ்ப்பாணர்.

அல்வழியில் யரழமுன் வலி.

வேய் + குறிது = வேய்குறிது
வேர் + சிறிது = வேர்சிறிது
யாழ் + பெரிது = யாழ்பெரிது
வேய்க்குழல்—வேய்ங்குழல்
ஆர்க்கோடு—ஆர்ங்கோடு
பாழ்க்கிணறு—பாழ்ங்கிணறு

யரழமுன்னர்க் கசதப அல்வழி
இயல்பும் மிகலும் ஆகும். வேற்றுமை
மிகலும் இனத்தோ டுறழ்தலும் விதிமேல். (224)

லகரமுன் வலிமேலியிடை

கயல் + கண் = கயற்கண்
வில் + கால் = விற்கால்
கல் + சுவர் = கற்சுவர்
நல் + செய்தி = நற்செய்தி
கல் + தூண் = கற்றூண்
வில் + தழும்பு = விற்றழும்பு
மல் + போர் = மற்போர்
நெல் + பயிர் = நெற்பயிர்
நல் + நூல் = நன்னூல்
கல் + நன்று = கன்னன்று
வில் + நாண் = வின்னாண்
செல் + நெறி = சென்னெறி
புல் + நுனி = புன்னுனி
கல் + மலை = கன்மலை

கல் + யாது = கல்யாது
கல் + யாப்பு = கல்யாப்பு
கல் + வளை = கல்வளை.

ளகரமுன் வலிமேலியிடை.

கள் + குடம் = கட்குடம்
புள் + குரல் = புட்குரல்
எள் + சாதம் = எட்சாதம்
உள் + சமயம் = உட்சமயம்
உள் + துளை = உட்டுளை
உள் + தெளிவு = உட்டெளிவு
உள் + பகை = உட்பகை
உள் + பொருள் = உட்பொருள்
முள் + மாட்சி = முண்மாட்சி
முள் + மரம் = முண்மரம்
உள் + மாசு = உண்மாசு
உள் + நாக்கு = உண்ணாக்கு
உள் + நாட்டம் = உண்ணாட்டம்

வெள் + நெய் = வெண்ணெய்

முள் + யாது = முள்யாது
முள் + யாப்பு = முள்யாப்பு

கிழக்கு + கரை = கீழ்கரை
கிழக்கு + திசை = கீழ்த்திசை
மேற்கு + குளம் = மேலைக்குளம்
மேற்கு + சேரி = மேலைச்சேரி
கிழக்கு + குளம் = கீழைக்குளம்
கிழக்கு + சேரி = கீழைச்சேரி
பத்து + ஒன்று = பதினொன்று
பத்து + இரண்டு = பன்னிரண்டு
பத்து + மூன்று = பதின் மூன்று
பத்து + ஆயிரம் = பதினாயிரம்
பத்து + மடங்கு = பதின் மடங்கு
பத்து + ஐந்து = பதிற்றைந்து (50)
பத்து + பத்து = பதிற்றுப்பத்து (100)
ஒன்று + பத்து = ஒருபது = ஒருபஃது
இரண்டு + பத்து = இருபது = இருபஃது
ஐந்து + படை = ஐம்படை
ஐந்து + பத்து = ஐம்பது
ஐந்து + கலம் = ஐங்கலம்
ஐந்து + மூன்று = ஐம்மூன்று
எட்டு + கழஞ்சு = எண் கழஞ்சு
எட்டு + கலம் = எண்கலம்
எட்டு + குணம் = எண்குணம்
எட்டு + ஐந்து = எண்ணைந்து
ஒன்று + ஆயிரம் = ஓராயிரம்
இரண்டு + ஆயிரம் = ஈராயிரம்
இரண்டு + ஐந்து = ஈரைந்து
மூன்று + ஆயிரம் = மூவாயிரம்
ஒன்பது + ஆயிரம் = ஒன்பதினாயிரம்
இரண்டு + நூறு = இருநூறு
மூன்று + நூறு = முந்நூறு
நான்கு + நூறு = நானூறு
ஐந்து + நூறு = ஐந்நூறு
எட்டு + நூறு = எண்ணூறு
மூன்று + பத்து = முப்பது
மூன்று + நூல் = முந்நூல்
மூன்று + கழஞ்சு = முக்கழஞ்சு
ஒன்று + கால் = ஒன்றேகால்
கால் + அரைக்கால் = காலேயரைக்கால்

இரட்டித்தல் பண்புத்தொகை

ஒன்று + ஒன்று = ஒவ்வொன்று......ஒரொன்று
இரண்டு + இரண்டு = இவ்விரண்டு..ஈரிரண்டு
மூன்று + மூன்று = மும்மூன்று......மும்மூன்று
நான்கு + நான்கு = நந்நான்கு.... ....நானான்கு
ஐந்து + ஐந்து = ஐவைந்து ..........ஐயைந்து
ஆறு + ஆறு = அவ்வாறு...............ஆறாறு
ஏழு + ஏழு = எவ்வேழு......... ..... ..ஏழேழு
எட்டு + எட்டு = எவ்வெட்டு.. .........எண்ணெட்டு
பத்து + பத்து = பப்பத்து..............பதிற்றுப்பத்து.

## VI. வடமொழிப் புணர்ச்சி.

1. தீர்க்கசந்தி. (*a*) அஆக்களில் ஒன்றன்முன் அஆக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலும் கெட ஆகாரமாம்.

அஷ்ட + அக்ஷரம் = அஷ்டாக்ஷரம்
பஞ்ச + அக்ஷரம் = பஞ்சாக்ஷரம்
பாத + அம்புஜம் = பாதாம்புஜம்
பாத + அரவிந்தம் = பாதாரவிந்தம்
சரண + அரவிந்தம் = சரணாரவிந்தம்
பரம + ஆநந்தம் = பரமாநந்தம்
ஸூர்ய + அஸ்தமனம் = ஸூர்யாஸ்தமனம்
கர்ண + அம்ருதம் = கர்ணாம்ருதம்
சிவ + அநுபூதி = சிவாநுபூதி
சிவ + ஆலயம் = சிவாலயம்
இரத்தின + ஆபரணம் = இரத்தினாபரணம்
கட + ஆகாசம் + கடாகாசம்
லோக + ஆசாரம் = லோகாசாரம்
ஸேனா + அதிபதி = ஸேனாதிபதி
ஸதா + ஆநந்தம் = ஸதாநந்தம்
பாஷா + அபிவிர்த்தி = பாஷாபிவிர்த்தி
கங்கா + அமிர்தம் = கங்காமிர்தம்

(*b*) இஈக்களில் ஒன்றன்முன் இஈக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலுங் கெட ஈகாரமாம்.

கிரி + இந்திரன் = கிரீந்திரன்
சுசி + இந்திரம் = சுசீந்திரம்
கிரி + ஈசன் = கிரீசன்
நதி + ஈசன் = நதீசன்
மகி + இந்திரன் = மகீந்திரன்

(*c*) உ ஊக்களில் ஒன்றன்முன் உ ஊக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழிமுதலும் கெட ஊகாரமாம்.

குரு + உபதேசம் = குரூபதேசம்
குரு + உதயம் = குரூதயம்
மேரு + ஊர்த்துவம் = மேரூர்த்துவம்
சுயம்பூ + உபதேசம் = சுயம்பூபதேசம்
சுயம்பூ + ஊர்ச்சிதம் = சுயம்பூர்ச்சிதம்

2. குணசந்தி. (*a*) அ ஆக்களில் ஒன்றன்முன் இஈக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலும் கெட ஏகாரமாம்.

நர + இந்திரன் = நரேந்திரன்
ஜின + இந்திரன் = ஜினேந்திரன்.
அந்திய + இட்டி = அந்தியேட்டி.
விக்கின + ஈசவரன் = விக்கினேசவரன்
பரம + ஈசுவரன் = பரமேசுவரன்
ஸ்ரோத்திர + இந்திரியம் = ஸ்ரோத்திரேந்திரியம்
ஸபா + ஈசன் = ஸபேசன்
மஹா + ஈசன் = மஹேசன்
உமா + ஈசன் = உமேசன்
தரா + இந்திரன் = தரேந்திரன்

(*b*) அ ஆக்களில் ஒன்றன்முன் உ ஊக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெட ஓகாரமாம்

நீல + உற்பலம் = நீலோற்பலம்
பாத + உதகம் = பாதோதகம்
மந்திர + உச்சாரணம் = மந்திரோச்சாரணம்
ஞான + ஊர்ச்சிதன் = ஞானோர்ச்சிதன்
ஞான + உதயம் = ஞானோதயம்
அருண + உதயம் = அருணோதயம்
ஸூர்ய + உதயம் = ஸூர்யோதயம்
சந்திர + உதயம் = சந்திரோதயம்
ஹித + உபதேசம் = ஹிதோபதேசம்
பூர்வ + உத்தரம் = பூர்வோத்தரம்
சாஸ்த்ர + உபதேசம் = சாஸ்த்ரோபதேசம்
தாம + உதரன் = தாமோதரன்
கங்கா + உற்பத்தி = கங்கோற்பத்தி
தயா + உற்பத்தி = தயோற்பத்தி
மஹா + உததி = மஹோததி
மஹா + உத்ஸவம் = மஹோத்ஸவம்

3. விருத்தி சந்தி. (a) அ ஆக்களில் ஒன்றன்முன் ஏ ஐக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெட ஐகாரமாம்.

ஏக + ஏகன் = ஐகைகன்
சதா + ஏகரூபம் = சதைகரூபம்
லோக + ஏகநாயகன் = லோகைகநாயகன்
பர + ஐக்கியம் = பரைக்கியம்
மகா + ஐச்சுவரியம் = மகைச்சுவரியம்

(b) அ ஆக்களில் ஒன்றன்முன் ஓ ஔக்களில் ஒன்று வந்தால் நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெட ஔகாரமாம்.

திவ்ய + ஔஷதம் = திவ்யௌஷதம்
கலச + ஓதனம் = கலசௌதனம்
மந்திர + ஔஷதம் = மந்திரௌஷதம்
கோமள + ஓடதி = கோமளௌடதி
மஹா + ஔஷதம் + மஹௌஷதம்
மஹா + ஓடதி = மஹௌடதி
மஹா + ஔதார்யம் = மஹௌதார்யம்

---

## அநுபந்தம்.

### தொகைநிலைத் தொடர்மொழி.

2—ம். வே
ஊராளி
இடக்கரடக்கல்
கடவுள் வணக்கம்
குடம் வனைதல்
கூறியது கூறல்
தற்காப்பு
தற்புகழ்ச்சி
தயிர்க்குடம்
தாய்கொல்லி (வாழை)
தொழிற்பெயர்
பண்டமாற்று
பாக்குவெட்டி
பிள்ளைப்பேறு
பிறைசூடி
புரமெரித்தோன்
விருந்தோம்பல்
3—ம் வே
ஊர்ப்பகை
கையெழுத்து
பொற்குடம்
பொற்றூலி
மோர்க்குழம்பு
வாட்டழும்பு
வாய்ப்பேச்சு
விற்றழும்பு
4—ம். வே.
அரசன்மகன்

எழுத்திலக்கணம்
தலையணை
பாண்டவதூதன்
புள்ளரசு
பேச்சுத்துணை
5—ம். வே
கண்ணீர்
புண்ணீர்
மலையருவி
6—ம். வே
அரிமாநோக்கம்
கத்திப்பிடி
சொற்பொருள்
சொற்றொடர்
நெற்பொரி
பெயரெச்சம்
மயிலினம்
மரக்கிளை
7—ம். வே
ஒருதலை துணிவு
இடைநிலை
கைப்பொருள்
கைவேல்
காட்டாறு
கோட்டுப்பூ
சுடலையாடி
தொன்று தொட்டு
நிலக்கரி
நெஞ்செலும்பு
மணியொளி
யானையேற்றம
வினைத் தொகை.
ஆகுபெயர்
உண்கலம்
எழுவாய்
எறியீட்டி
கவர்பொருள்
செய்கடன்
தின்பண்டம்
தொடர்மொழி
நிறைகுடம்
பகுபதம்
வருவாய்
பண்புத்தொகை
ஐங்காண்டிகை
கருங்குவளை
சாரைப்பாம்பு
சித்திரப்பாவை
செங்கோல்
தண்ணீர்
தொழிற்பெயர்
நெடுந்தெரு
பேராசை
பொதுமொழி
முற்காலம்
வட்டக்கல்
வெந்நீர்
உவமத்தொகை
கயற்கண்
துடியிடை
பொன்னிறம்
மதிமுகம்
வேற்கண்
பவழவாய்
கமலக் கண்ணன்
உம்மைத்தொகை
கபிலபரணர்
காலேயரைக்கால்
கைகால்
சேரசோழபாண்டியர்
பதினொன்று
மூன்றரை
பிழைதிருத்தம்
வினவிடை

அன்மொழித் தொகை
உயிர்மெய்
எழுநா
ஐம்பால்
கட்செவி
கறையடி
குடாவடி
கைம்மலை
கொடுவரி
நால்வாய்
வடமேற்கு
இலக்கணப்போலி.
அகநகர்
ஈயவெள்ளை
கடைவாய்
கண்ணுதல்
தலைக்கடை
தலைவாயில்
பிற்பகல்
பின்மாலை
புறக்கடை
புறநகர்
மீகண்
மேல்வாய்
வாயில்
முற்பகல்
ல்

## தொகாநிலைத் தொடர்மொழி.

பெயரெச்சத் தொடர்
இறந்தகாலம்

தொகாநிலை
பகாப்பதம்
பெறுப்பேறு
வரும்படி
வாடாமல்லி
விடாமுயற்சி
வினையெச்சத்தொடர்
உய்த்துணர வைப்பு
எடுத்துக் காட்டல்
குன்றக்கூறல்
சுருங்கச்சொல்லல்
மயங்கவைத்தல்
மிகைபடக்கூறல்
வகுத்துக்காட்டல்
விளங்கவைத்தல்
2—ம். வே.
சேந்தாரைக்கொல்லி
நூற்றுவரைக்கொல்லி
4—ம். வே.
நவின்றோர்க்கினிமை
7—ம். வே.
தலைமாட்டுக்கொள்ளி
கால்மாட

## மும்மொழித் தொடர்.

அறநெறிச்சாரம்
அறவாழியந்தணன்
ஆவுரிஞ்சுதறி
இரட்டுற மொழிதல்
இராசராச சோழன்
இருதலைக் கொள்ளி
இருவினை யொப்பு
உலகியலறிவு
ாறு
நாகம்
ாயைம்பது
ஒருசாலை மாணுக்கன்
ஒத்துமுறை வைப்பு
கலைபயிதெளிவு

